NAS 476

# மர்பி மினிபாய் டிரான்ஸிஸ்டர்கள் ...லண்டனுக்கு

என்னுடைய ஆங்கிலேய
ரசிகர்களும்கூட என்னை
விரும்பத்
தொடங்கிவிட்டனர்.
பெருமைக்குரிய விஷயம்!



FOR EXPORT

S.S. MURPHY TRANSISTOR

BOMBAY TO LONDON
MURPHY TRANSISTORS

# கல்கி பொருளடக்கம்

சாதாரண, ஆவணி 7 - 1970, ஆகஸ்டு 23





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

# கோஷ்டி சேராக் கொள்கை: புதிய பாணி



உங்கள் கண்ட்ரோல்கள் எங்களுக்குப் பிடிக்கலே இல்லே!

ஆனால் உங்கள் பணம் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறதே!

தொழிலதிபர்கள்

குற்றங்கள் நிகழ்வதற்கான சமூகக் காரணங்களை நான் சமாளித்துக் கொண்டு வருகிறேன்.






மலர் 30



இதழ் 4

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



# வருமுன் தடுப்பதா? வந்தபின் முடிப்பதா?

சமூக ஒழுங்குக்குத் தீங்கு ஏற்படக் கூடும் என்று எதிர்பார்த்து, முன்கூட்டியே ஒருவரைக் கைது செய்து வைப்பதற்குத் தடுப்புக் காவல் சட்டம் இடம் அளித்தது. இச்சட்டம் பல்லாண்டுகளாக மீண்டும் மீண்டும் அகில இந்திய ரீதியில் உயிரளிக்கப்பட்டு, வழக்கில் இருந்து வந்தது. ஆனால் தேசத்தில் கம்யூனிஸ்ட் வன்செயல்கள் மிகவும் அதிகமாகி, இச்சட்டம் மிகவும் தேவைப்பட்ட சமயத்தில் இச்சட்டத்துக்குப் புதுத் தவணை தர இந்திய அரசாங்கம் தவறிவிட்டது. அகில இந்திய அடிப்படையில் தடுப்புக் காவல் சட்டத்தை நீடிக்காமல், ராஜ்ய அரசாங்கங்கள் உசிதப்படி தடுப்புக் காவலுக்கு உத்தரவு பிறப்பித்தாலே போதும் என்று புது ஏற்பாடு செய்துவிட்டது. ஆட்சியாளர்களின் நிர்வாகத் தகுதியின்மைக்கும், முறையாக முடிவு காணும் விவேகம் இல்லாமைக்கும் இது ஓர் அழுத்தமான எடுத்துக்காட்டாகும். ஏமாளிகளான மக்களும், சுயமுன்னேற்றத்தையே கருதும் அரசியல்வாதிகளும் நிறைந்த நம் நாட்டில் அரசாங்கத்தால் இப்படியெல்லாம் சர்வசகஜமாகச் செய்ய முடிகிறது!

தடுப்புக்காவல் சட்டம் நீடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதைக் கம்யூனிஸ்டுகளின் 'நிலப்பறி' இயக்கத்தில் நன்கு உணருகிறோம். இது கம்யூனிஸ்ட் தலைவர்களின் அரசியல் நோக்கம் கொண்டதொரு திட்டம். இதை உடனுக்குடன், வெகு கண்டிப்புடன் தடுத்து நிறுத்தியிருக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்யவில்லை. இதனால் பிரச்னைகள் பல மடங்காகப் பெருகி விட்டன.

ராஜஸ்தானமும், உத்தரப் பிரதேசமும் தடுப்புக்காவலுக்கு உத்தரவு பிறப்பித்தது பாராட்டுக்குரியது. ஆனால் ஆரம்பத்தில் தமிழ் நாட்டுச் சர்க்கார் இவ்விதம் உடனடியாகத் தடுப்பு நடவடிக்கை எடுக்காமல் கம்யூனிஸ்ட்டுகளுடன் பேச்சுவார்த்தை நடத்துவதிலும், சலுகை காட்டுவதிலுமே முனைந்திருந்ததாகத் தோன்றியது. அப்போதே அவசரச் சட்டம் பிறப்பித்துத் தடுப்பு நடவடிக்கை எடுத்திருந்தால், சர்க்காருக்கு இணையாக இன்னொரு கம்யூனிஸ்ட் சர்க்கார் ஏற்படுத்துவது போன்ற முயற்சியை முளையிலேயே கிள்ளியிருக்கலாம். சுமார் இருபத்தைந்து தலைவர்களைக் கைது செய்வதன் மூலமே இயக்கத்தைத் தோல்வியுறச் செய்திருக்கலாம். காலதாமதம் செய்த தன் விளைவாக இன்று ஆயிரக்கணக்கில் கைது செய்ய நேரிட்டிருக்கிறது. உண்மையில் தவறு புரிபவர்கள், சட்ட விரோதமான நடவடிக்கையைத் தூண்டிவிடுகிற ஒருசில தலைவர்கள் தாம். ஏமாந்து போய், அவர்களைப் பின்பற்றுபவர்களை உண்மையில் குற்றவாளிகள் என்பதற்கில்லை. தமிழக அரசாங்கம் நிலப்பறி இயக்கத்துக்கான பிரசாரம் வலுவடைவதற்கு அவகாசம் தந்து, தன் காரியத்தைத் தானே கடினமாக்கிக் கொண்டு விட்டது.

கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்வதில் அரசாங்கத்தார் அவசரம் காட்ட மாட்டார்கள் என எண்ணுகிறேன். அரசியலில் எந்தக் குற்றம் செய்தாலும் தண்டனை மிகக் குறைவாகவே இருக்கும் என்ற தெம்பில் இது போன்ற செய்கைகளில் யாரும் எளிதில் ஈடுபட இடமளிக்கக் கூடாது.

நான் முதன் முதலில் கற்ற ஆங்கிலப் பழமொழி ''குணப்படுத்துவதை விடத் தடுப்பது சிலாக்கியம்'' (Prevention is better than cure) என்பது. ஆனால் அப்போது நான் மிகச் சிறுவனாக இருந்ததால், அதன் பொருள் எனக்குப் புரியவில்லை. பிறகுதான் ''வியாதி வந்தபின் குணப்படுத்துவதை விட வியாதியே வராமல் தடுத்து நிறுத்துவது சிலாக்கியம்'' என்று அதன் பொருளை உணர்ந்தேன். அதிகார பீடத்தில் உள்ளவர்கள் இந்தப் பழமொழியை இன்னும் கற்கவில்லை என்று தெரிகிறது. தமக்கு முன் ஆட்சி செலுத்தியவர்களின் உதாரணத்தைப் பார்த்தும்கூட அவர்களுக்கு இந்த உண்மை புரியக் காணோம்.

(அடிப்படை: 'ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஏதேதோ விஷயங்களைப் பற்றிப் பிரதமரும், அவரது கட்சிக்காரர்களும் அபிப்பிராயம் சொல்கிறார்கள்; அவற்றில் அபிவிருத்தி காண்போம் என்று வாக்குறுதி தருகிறார்கள். ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் அவர்கள் பேசவே விரும்புவதில்லை. அதுதான், பெர்மிட்—லைசென்ஸ் வழங்கும் அதிகாரத்தை சர்க்காரின் சார்பற்ற ஒரு சுதந்திரக் குழுவிடம் ஒப்புவிப்பது. தேச நலனை மட்டுமே கருத்தில் கொண்டு தொழிலகங்கள் குறித்து முடிவெடுக்கும் யோக்கியதாம்சம் வாய்ந்தவர்களிடமே பெர்மிட் — லைசென்ஸ் வழங்கும் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும்.

ஆனால் இது விஷயமாகப் பிரதமர் அக்கறை காட்டாததற்குக் காரணம்: பெர்மிட்—லைசென்ஸ் மூலம் தொழிலகங்களின் மீதெல்லாம் ஆட்சியாளர் ஆதிக்கம் செலுத்த முடிவதால், ஆளும் கட்சிக்கு அவை தங்கச் சுரங்கமாக இருக்கின்றன. இந்த அநுகூல நிலையை விட்டுவிடக் கூடாது என்று பிரதமர் உறுதியாக இருக்கிறார்.

கட்சிச் சார்புடைய அரசாங்கங்கள் இவ்வாறு ரகசியமாக நிதி திரட்ட இடமில்லாமல் செய்யச் சுதந்திரக் குழுவிடம் பெர்மிட்—லைசென்ஸ் நிர்வாகப் பொறுப்பைத் தரவேண்டும் என்ற சீர்திருத்தக் கோரிக்கை நீண்டகாலமாகக் கவனிக்கப்படாமலே உள்ளது. ஸ்தாபன காங்கிரஸின் பார்லிமெண்ட் தலைவர் ஸ்ரீ ராம் ஸுபக் சிங் அவர்களும், இவ்வாறே அரசியல் கட்சிகளுக்கும் பெர்மிட்—லைசென்ஸ் விநியோகத்துக்கும் தொடர்பு இருக்கக்கூடாது என்று தம் கட்சியின் சார்பில் அறிவித்திருப்பதாக எண்ணுகிறேன்.

எந்தக் கட்சி ஆட்சியில் இருப்பினும் சரி, அக்கட்சி நிதியம் திரட்டுவதற்கும், நாட்டிலுள்ள தொழிலகங்களின் நிர்வாகத்துக்கும் எவ்விதச் சம்பந்தமும் இருக்கலாகாது. ஆளும் கட்சியினர் இந்த முக்கியமான விஷயத்தை விவாதங்களிலிருந்து அகற்றிவிட்டு, நடவடிக்கை எடுக்காமல் மௌனம் சாதிப்பது மிகவும் நேர்மைக் குறைவானது.

டில்லி சர்க்காரை நான் எதற்காகக் குற்றம் சாட்டுகிறேனோ, அதே காரணங்களுக்காகவும், அதே நோக்கங்களுக்காகவும், ராஜ்ய அரசாங்கங்களும் தங்களுக்குத் தொழிலகங்கள் மீது அதிகாரம் வேண்டும் என விரும்புவது இயற்கை. ஆனால் இதற்கு இடமளித்தால் பெரிய விபரீதமாகிவிடும்.

★

மேற்கு ஜெர்மனியும் ருஷியாவும் செய்து கொண்டுள்ள அநாக்கிரமிப்பு ஒப்பந்தம் ஒரு மகத்தான சாதனையாகும். பயமும் சந்தேகமும் வலுத்துவிட்ட இன்றைய உலகில் அரசியல்வாதிகள் எவ்வளவு ஐயப்பட்டாலும் சரி இந்த உடன்பாடு ஒரு நல்ல முடிவாகும். மற்ற எந்த அரசின் தலையீடும் இன்றி இவ்விரு நாடுகளும் தாமாக உடன்பாடு கண்டிருப்பது விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. பனிப்போர் முடிந்து சமாதானம் நிலவுகிற நிலைமையை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்து நம்பிக்கை ஊட்டியுள்ளனர்.

ருஷியாவுடன் முரண்பாடு கொண்டுள்ள சீனத்தின் அதிகாரம் ஓங்கி வருவது, இந்த உடன்படிக்கை ஏற்பட உதவியிருக்கக்கூடும். காரணம் எதுவாயினும், ஹிட்லரின் ஆவியை விரட்டுகின்ற ஓர் உடன்பாட்டை ருஷியாவும் ஜெர்மனியும் செய்து கொண்டிருப்பது உலக நடவடிக்கைகளில் ஒரு நல்ல முன்னேற்றமாகும்.

★

அமெரிக்காவுக்கு எரிச்சலூட்டும் காரியங்களை இந்திய சர்க்காரின் வெளிநாட்டு இலாக்கா தொடர்ந்து செய்கிறது. வட வியட்நாமில் உள்ள இந்திய தூதரகத்தின் அந்தஸ்தை ஓர் அவசியமுமின்றியே உயர்த்தினார்கள். இப்போது க்யூபாவில் ஒரு புதிய தூதராலயம் ஏற்படுத்தப் பெறுகிறது. 'இளைஞர் காங்கிர'ஸின் முன்னாள் தலைவர் ஒருவரின் பொறுப்பில் இந்த தூதரகம் விடப்படுகிறது. இதைக் கம்யூனிஸ்ட் சார்பான இன்னொரு நடவடிக்கை என்று மக்கள் பொருள் கொள்வதைத் தவிர்க்க முடியாது.

## காமேசுவரி கும்பாபிஷேகம்

பராசக்தியின் அருட்பெருக்குக்கு ஓர் ஊற்றுக் கண்ணாக விளங்கி, ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரியாளின் விசேஷ ஈடுபாட்டைப் பெற்றிருப்பது சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள ஸ்ரீ காமகலா காமேசுவரி ஆலயம். தெய்வப் பணிகளில் சிறந்து விளங்கும் ஸ்ரீ எஸ். ஜி. ரத்தினம் அய்யர் அவர்களின் தலைமையில் பல பிரமுகர்கள் அடங்கிய குழு அமைக்கப்பட்டு ஸ்ரீ காமேசுவரி ஆலய மகா கும்பாபிஷேகம் செப்டம்பர் ஆறும் தேதி அதிகாலையில் நிகழ்கிறது. பொதுமக்களிடம் நிதி திரட்டாமல், அன்பர்கள் ஒருசிலர் மட்டும் ஒவ்வோர் இனமாகத் தங்களுக்குள் வகுத்துக் கொண்டு இத்திருப்பணி நடந்திருப்பது குறிப்பிடத்தக்கது. தற்போது கும்பாபிஷேகத்துக்குப் பொது மக்களில் அதிகப்பட்சமானவர்களின் பங்கினைப் பெற உத்தேசித்திருக்கிறார்கள். அதாவது தலைக்கு ஒரே ஒரு ரூபாய் வீதம் நன்கொடை பெற்றுக் குடமுழுக்கு விழா நடத்த எண்ணியிருக்கிறார்கள். மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ காமகலா காமேசுவரி தேவஸ்தானம், வெங்கடாசல நாயகன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 என்ற முகவரிக்கு அன்பர் ஒவ்வொருவரும் போஸ்டல் ஆர்டராகவோ, மணியார்டராகவோ ஒரு ரூபாய் அனுப்ப வேணும்.







## ஜனசங்க மகாநாடு

தமிழ்நாட்டு ஜனசங்கத்தின் நான்காவது மகாநாடு சென்னை அபட்ஸ்பரியில் சென்ற 9, 10 தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது. ஜனசங்கத்தின் தேர்தல் சின்னமான தீபத்தைத் தமிழக ஜனசங்கத் தலைவர் திரு வாசுதேவன் ஏற்றித் தொடங்கி வைத்தார். மகாநாட்டுக்குத் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து பஸ்களிலும், ரயில்களிலும் லாரிகளிலும் 5527 பிரதிநிதிகள் வந்திருந்தனர். ஜனசங்கத்தின் முக்கியத் தலைவர் திரு அதுல்பிஹாரி வாஜ்பாய் வருவதாக இருந்தது. அவருக்குத் திடீரென்று உடல் நோயுற்றதால் வர இயலவில்லை. அவர் வராத குறையை ஜனசங்கத்தின் மற்ற தலைவர்களான திரு ஜகந்நாத ராவ் ஜோஷி, எம்.பி., திரு குப்தா எம். பி., திரு பரமேசுவரன் எம். பி. முதலியோர் உணர்ச்சி பொங்கப் பேசி நிறைவு செய்தனர். பிரதிநிதிகள் தவிர பார்வையாளரும் இரண்டு நாள் மகாநாட்டுக்கும் ஏராளமாக வந்திருந்தனர்.





# ஆஸ்திக உலகுக்கோர் ஆஸ்தி:
# எம்.எஸ்ஸின் பக்திக் காணிக்கை

**பா**ரத யுத்தம் முடிந்தது. கண்ணன் தர்ம புத்திரனை அழைத்து, ''அணையும் அக்னி போல் பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருக்கிறார். அவர் மறைந்தால் அவரிடமுள்ள ஞானச் செல்வம் அனைத்தும் அஸ்தமித்துப் போகும். எனவே, நீ இப்போதே அவரை அடுத்துச் சகல தர்மங்களையும் அறிந்து கொள்வாயாக'' எனக் கூறினான். அவ்விதமே தர்மன் பீஷ்மரிடம் தர்மத்தின் மர்மங்களையெல்லாம் கேட்டறிகிறான்-பிதாமகர் நிறைந்த மனத்தோடு ராஜ தர்மம், ஆபத் தர்மம், ஸ்திரீ தர்மம், மோக்ஷ தர்மம் முதலியவற்றை விளக்குகிறார். ஆயினும் தர்ம புத்திரனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. சிறிய முயற்சியிலேயே பெரும் பயன் அளிக்கத் தக்க மகத்தானதோர் உபாயத்தைத் தனக்குப் போதிக்க வேணுமெனப் பிரார்த்திக்கிறான். அந்த மகத்தான உபாயத்தை உடனே அருளுகிறார் பீஷ்மர். அதுதான் **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்** — திருமாலின் திருநாமங்கள் ஆயிரத்தைத் தொகுத்துக் கூறும் புனிதத் துதி. ''புண்டரீகாக்ஷனைப் பக்தியுடன் இந்தத் துதியால் அர்ச்சிப்பதே ஸர்வ தர்மங்களுக்கும் மேலான தர்மம்'' என்று குருகுலச் செம்மல் எடுத்தியம்புகிறார்.

விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் காணப்படும் பகவன் நாமாக்கள் ஒவ்வொன்றும் பரமனது ஒரு சிறப்பியல்பைப் பேசுபவை. (**நாமானி கௌணானி** என்று இதை பீஷ்மர் குறிப்பிடுகிறார்.) அவை பீஷ்மருக்கு முன்னரே ரிஷிகளால் மொழியப்பெற்றவை. பீஷ்மருக்குப் பின்னரும் மகான்களாகிய ஆசாரிய புருஷர்கள் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்கு உரைகள் அருளினர். இவர்களில் ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்கள், வேள்வி பூஜை முதலிய மற்ற சாதனங்களை விட பகவந்நாம ஜபத்தை விசேஷமாகப் போற்றுகிறார். ஏனெனில் இதில் (வேள்வியில் போல்) ஹிம்சை முதலியன இல்லை; பிறர் எவர் உதவியும், வெளிப்பொருள் எதன் தேவையும் வேண்டியதில்லை; பகவந்நாமத்தை மொழியக் காலம், இடம் முதலிய கட்டுப்பாடுகளும் இல்லை என்கிறார்.

இவ்வாறு தர்ம சாதனங்களில் தலைசிறந்ததாக, அதேபோதில் வெகு எளிதில் அப்பியசிக்கக் கூடியதாக இருப்பது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம். 'தினந்தோறும் இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்பவனும் கேட்பவனும் இம்மையிலும் மறுமையிலும் சிறிதும் இன்னல் அடைவதில்லை. அவன் நோய், பந்தம், பயம், ஆபத்து முதலியவற்றினின்றும் விடுபடுகிறான். அவனுக்கு ஆன்ம சுகம், பொறுமை, செல்வம், தைரியம், ஞாபக சக்தி, புகழ் அனைத்தும் கிட்டுகின்றன' என்றெல்லாம் 'பல சுருதி' அடுக்கிக்கொண்டே போகிறது. விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணத்தைக் காட்டிலும் சிறந்த தவமில்லை எனப் பொருள்படும் முகமாகப் பூதத்தாழ்வார்,

**ஏற்றிப் பணிந்(து) அவன்பேர் ஈரைஞ்நூ(று)**
**எப்பொழுதும் சாற்றி யுரைத்தல் தவம்**

என்கிறார்.

பகவானின் அனந்த கலியாண குணங்களையும் குணங்கடந்த கைவல்ய நிலையையும், பக்தி ததும்புகின்ற—ஞானம் பொங்குகின்ற—கவித்துவம் மிளிருகின்ற — ஓராயிரம் நாமாக்களால் விளக்கும் பரம பவித்திரமான விஷ்ணு ஸஹஸ்ரநாம நூல் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நம் நாட்டில் ஓதப்பட்டு வருகிறது.

பரம்பொருளின் பல மூர்த்திகளுக்கும் ஸஹஸ்ரநாமம் இருப்பினும் விஷ்ணு ஸஹஸ்ர நாமம் அவற்றுள் சிறப்பிடம் பெற்றிருக்கிறது. இதனால்தான் மறையோர் தினமும் ஓதவேண்டிய ஐந்து நூல்களில் அவரவருக்குரிய உபநிஷதம், கீதை, ருத்ரம், புருஷ ஸூக்தம் இவற்றோடு விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் விதிக்கப்படுகிறது.

குணமற்ற பரம்பொருளுடன் ஐக்கியமடையும் ஞானப் பாதையை வகுத்து, அப்பரம்பொருள் கொண்ட சகல தெய்வ வடிவங்களின்மீதும் துதி செய்து பக்திப் பாதையைச்



செப்பனிட்ட ஸ்ரீ சங்கர பகவத்பாதரும், மானிடனின் கடமையை விதிக்கும்போது அவன் கீதையையும், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் ஓதவேண்டும் — **கேயம் கீதா நாம ஸஹஸ்ரம்** — என்கிறார்.

இவ்வாறு அவர் கூறுவது, தமது '**பஜ கோவிந்த**' நூலில் ஆரும். அறிவு வாதத்தால் பிறப்பைக் களைய முடியாது; கோவிந்தனை பஜிப்பதே கடைத்தேற வழி என்று கூறி, மாயையைத் தகர்க்கும் சம்மட்டியாக (மோஹ முத்கரமாக) ஸ்ரீ சங்கரர் அருளிய அற்புதத் துதி 'பஜகோவிந்தம்'. இக உலகின் நிலையா இன்பங்களையும், அதே போல் ஆன்ம உலகின் கலையாப் பேரின்பத்தையும் அழ தொழுகும் அநுபவ வசனங்களால் விளக்கும் பக்திப் பண்டம், கவித்துவப் பாண்டம், ஞானப் பிண்டம் 'பஜகோவிந்தம்'. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைப் போலவே பண்டிதர் பாமரர் ஆகிய இரு சாராரையும் ஈர்த்துப் பயன் தருவது ஸ்ரீ ஆசாரிய சங்கரரின் 'பஜகோவிந்தம்'.

இவ்விரண்டையும் இங்கு சேர்த்து எழுதிவிருப்பதற்குக் காரணம் உண்டு. ஆஸ்திக உலகுக்கு எத்தனையோ விதங்களில் அருந்தொண்டாற்றியுள்ள சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பஜகோவிந்தத்திலிருந்து பத்து சுலோகங்களையும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் முழுவதையும் ஒரு நீண்ட நேர இசைத்தட்டில் **(Long Playing Record)** பதிப்பித்துள்ளார். இதனை ஆஸ்திக உலகின் ஓர் ஒப்பற்ற ஆஸ்தி என்றே கூறலாம்.*

இசைத்தட்டில் முதலில் 'பஜகோவிந்த'த்தைப் பற்றி ராஜரிஷி ராஜாஜி அவர்கள் கூறும் மகோந்நத மொழிகளைக் கேட்கிறோம். 'ஞான சமுத்திரத்தை உள்ளங்கை நீராக அள்ளிக் குடித்த சங்கரர் பக்தியும் ஞானமும் ஒன்றே என்று உலகுக்கு உணர்த்தவே கோவிந்தன் மீது இனிய இத் துதியை அளித்தார்' என்று ராஜாஜி கூறுகிறார்.

பிறகு ஸ்ரீமத் பரமஹம்ஸ ராமகிருஷ்ணரின் மீது ஸ்வாமி விவேகாநந்தர் இயற்றிய தியான சுலோகத்தை ஸ்ரீமதி எம். எஸ். பக்தியில் நனைந்த சாரீரத்தில் பாடக் கேட்டு, அந்த அரை நிமிடமும் அப்படியே மனோலயம் அடைகிறோம். 'ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வந்தவனே இன்று ராமகிருஷ்ணனாக வந்திருக்கிறேன்' என்று ஸ்ரீ பரமஹம்ஸரே மொழிந்திருப்பதால் இந்த இசைத்தட்டுத் தொடக்கத்தில் அவ் அவதார புருஷரின் துதி மிகவும் பொருத்தமாக அமைந்து நம்மை உருக்குகிறது. இதை யொட்டி, ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் 'பஜ கோவிந்த'த்திலிருந்து பத்து சுலோகங்களைப் பத்து ராகங்களில் பக்தி புஞ்சிதமாகப் பாடுகிறார். சுலோகங்களின் பொருட் சிறப்பு, சொல்லினிமை இவற்றோடு எம். எஸ்ஸின் பக்திப் பெருக்கும், சாரீர வளமும், மெட்டுக்களின் இசை விசேஷமும் சேர்ந்து நம்மை அப்படியே பரவசப்படுத்தி விடுகின்றன.

சில விநாடிகள் தம்புரா நாதம் மட்டுமே ஒலித்துச் சாந்தி பரப்புகிறது. தொடர்ந்து, கம்பீரமும் கனிவும் ஒருங்கே இசைந்த குரலில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும், ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் 'விஷ்ணு ஸஹஸ்ரநாம'த்தை பரம சம்பிரதாய சுத்தமாக ஓதுகின்றனர். இசைத்தட்டில் முதல் புறத்தில் உபோத்காதமும் தியான சுலோகங்களும் அடங்குகின்றன. மறுபுறம் ஸ்தோத்திரமும், பல சுருதியும்.

'ஸ்பஷ்டாக்ஷரன்' என்பது ஆயிரம் நாமங்களில் ஒன்று. ஸ்ரீமதி எம். எஸ். அக்ஷரங்களை ஸ்பஷ்டமாக உச்சரிப்பதைக் கேட்டு அந்த 'ஸ்பஷ்டாக்ஷரன்' நிச்சயம் அநுக்கிரக மழை பொழிவான். துதியாக உள்ள 'ஸ்தோத்ரன்' அவன்; அதனைப் பிரியமுடன் செவிமடுக்கும் 'ஸ்தவப்ரிய'னும் அவனே—என்ற உண்மை எம். எஸ். அவர்கள் ஸஹஸ்ரநாமத்தை நவிலக் கேட்கையில் நம் உள்ளத்தில் ஆழப் பதிகிறது. பலசுருதியில் கூறப்பட்ட சகல நலங்களும் அவருக்கு உண்டாகட்டும் என்று மனமார வாழ்த்துகிறோம்.

அவருக்குக் கிடைக்கும் பலன் இருக்கட்டும். இந்த இசைத்தட்டினால் ஆஸ்திக உலகுக்குப் பெரும் பலன் இடைப்பதோடு, ஆஸ்திக நிறுவனங்களில் தலைசிறந்த ஸ்ரீராமகிருஷ்ண மடத்துக்கும் நலன் கூடுகிறது. 'பஜகோவிந்த'த்தில் பொருளாசையை விடுமாறும் தீனர்களுக்குச் செல்வத்தை அளிக்குமாறும் ஆசாரியர் விடுக்கும் ஆணை, ஸ்ரீமதி எம். எஸ்ஸின் வாழ்க்கைத் தத்துவமாக ஆகிவிட்டதல்லவா? அதற்கேற்ப இந்த இசைத்தட்டில் அவருக்குரிய வருவாய் (Royalty) முழுவதும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்கே அளிக்கப்படுகிறது. இதனை முன்னிட்டே இந்த இசைத்தட்டின் தொடக்கத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தியான சுலோகத்தை எம். எஸ். பாடியிருக்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி தினமாகிய ஆகஸ்ட் 24ந் தேதி இந்த இசைத்தட்டு ஐந்து இடங்களில் வெளியிடப்படுகிறது. ஹைதராபாத்தில் ராஷ்டிரபதி டாக்டர் வி. வி. கிரி அவர்கள் வெளியிடுகிறார்; தில்லியில் சம்ஸ்கிருதப் பேரறிஞராகிய லெப்டினென்ட் கவர்னர் டாக்டர் ஏ. என். ஜா அவர்கள் வெளியிடுகிறார்; கல்கத்தாவில் பண்டிதோத்தமராகிய டாக்டர் சுநீதி குமார் சாட்டர்ஜி வெளியிடுகிறார்; பம்பாயில் ஆஸ்திகச் செல்வர் குலபதி டாக்டர் கே. எம். முன்ஷி அவர்கள் வெளியிடுகிறார்; சென்னையில் ஸ்ரீ உடுபி கிருஷ்ணனுடைய அநுக்கிர மூர்த்தியே போன்ற பூஜ்ய ஸ்ரீமத் பேஜாவர் மடாதிபதிகள் வெளியிடுகிறார்கள்.

நாடெங்கும் இனி பஜகோவிந்தமும் விஷ்ணு ஸஹஸ்ர நாமமும் ஒலித்து, பூலோக வைகுண்டமாகட்டும்!

---

இதய அமுதமான ஸஹஸ்ரநாமத்தையும் பஜ கோவிந்தத்தையும் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் கர்ணாமிருதமாக அளித்துள்ளதையொட்டி, ஸஹஸ்ர நாம நாயகனான ஸ்ரீமந் நாராயணனையும், பஜ கோவிந்த கர்த்தரான ஸ்ரீ ஆதி சங்கரரையும் நேத்ராமிருதமாக இவ்விதழ் அட்டையில் வழங்குகிறார் ஓவியர் [illegible].

---

* Gramophone Company S/MOAE 5011

ராயப்பேட்டை நெடுஞ்சாலையின் வழியே வந்தால் லாயிட்ஸ் சாலையின் முகப்பில் மாடி வீடொன்று காணப்படும். 'லாயிட் கார்னர்' என்று அதற்குப் பெயர். இந்த வீட்டில் தமிழகத்தின் சரித்திரத்தை மாற்றிய முக்கியத்துவம் வாய்ந்த சந்திப்பு ஒன்று நிகழ்ந்தது!

1957-ஆம் ஆண்டில், மூதறிஞர் ராஜாஜி அவர்களும், மறைந்த பேரறிஞர் அண்ணாதுரையும் சந்தித்து, அரை மணி நேரத்துக்கு அதிகமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

இவருக்கு இதுவும் தெரியும்





# வயலின் வாசிக்கும் வழக்கறிஞர்



அதற்கு முன்பு அவ்விருவரும் இரண்டு மூன்று முறை பொது நிகழ்ச்சிகளில் பார்த்துப் பேசியதுண்டு. தனிப்பட்ட இடத்தில் பேசியதில்லை. ராஜாஜி — அண்ணா நட்புக்கு அஸ்திவாரம் போடப்பட்டது, அந்த லாயிட்ஸ் சாலை வீட்டில்தான்!

இரு பெரும் அரசியல் தலைவர்களையும் சந்திக்க வைத்த பெருமை திரு வெங்கட்ராம பட்டாபி ராமனுக்கே உரியது.

சென்னையின் மிகப் பெரிய வழக்கறிஞர்களுள் ஒருவரான திரு வி. பி. ராமன் தி. மு. க. வில் சேர்ந்திருந்தார். 1960ல் தீவிர அரசியலிலிருந்து விலகிவிட்டார்.

இன்று முப்பத்திஎட்டு வயது ஆனாலும் பார்வைக்குப் பதினெட்டு வயது வாலிபர் மாதிரியே தோற்றமளிக்கும் இவர் சர்க்காரில் சுகாதார — பொறி இயல் நிபுணராகப் பதவி வகித்து ஓய்வு பெற்ற ஏ. வி. ராமனின் ஒரே மகன்.

ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுதிப் பெரிய அதிகாரியாக வர வேண்டும் என்று தாயார் விரும்ப, தந்தையோ, ''நான் அடிமை வேலை பார்த்தது போதும், பையன் சுதந்திரமாக இருக்கட்டும்!'' என்று கூறிவிட்டார்.

திரு வி. பி. ராமன் சட்டப் படிப்புக்கு வந்து சேர்ந்தார்.

முன்னாள் சுப்ரீம் கோர்ட் நீதிபதியான திரு டி. எல். வெங்கடராம ஐயரைப் போலவே, பி. எல்., எம். எல். வகுப்புக்களில் மாநிலத்திலேயே முதல் மாணவராக வந்து, தங்கப் பதக்கங்களைப் பெற்றார்.

சோவியத் அரசுக்கு எதிராக ஒரு பிரபல சென்னை கான்ட்ராக்டருக்காக ஆஜராகி, ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள வழக்கை நடத்தி, ஒரு முக்கிய கட்டத்தில் சுப்ரீம் கோர்ட் வரை சென்று வெற்றி பெற்றார்.

இந்திய அரசுடன் — பிஜு பட் நாயக்குக்கு ஏற்பட்ட ஒரு முக்கிய மத்தியஸ்த வழக்கையும் நடத்தியிருக்கிறார்.

சர்வதேசக் கடத்தல் கொள்ளைக்காரனும் இப்போது பம்பாய் சிறையில் இருப்பவனுமான வால்காட்டுக்குத் தண்டனை வாங்கித் தந்தவரும் இவரே!

தமிழ் நாட்டைத் தவிர, பிற மாநில உயர் நீதிமன்றங்களுக்கும் சென்று வாதம் செய்யும் மிகச் சில வழக்கறிஞர்களில் வி. பி. ராமனும் ஒருவர்.

இளம் வயதிலேயே வழக்கறிஞராகப் புகழ் பெற்றுவிட்ட வி. பி. ராமன், ஓர் இசைக் கலைஞரும் கூட! ஆம், ராமன் வயலின் வாசிக்க முறையாகப் பயின்றவர். நன்கு வாசிக்கத் தெரிந்தவர்.

இயந்திரங்களின் உதவி யின்றி முழுக்க முழுக்கக் கையாலேயே செய்யப்பட்ட மிகச் சிறந்த வயலின் இவரிடம் இருக்கிறது. இதைத்தான் ராமன் வாசிக்கிறார்.

வி. பி. ராமனுக்கு இசையில் எப்படி நாட்டம் பிறந்தது தெரியுமா? அது ஒரு சுவாரசியமான நிகழ்ச்சி!

1941ம் ஆண்டில் ஒரு முறை வெளியூர் சென்றிருந்த திரு ஏ. வி. ராமன் திரும்பி வருகையில் அருமை மகனுக்கு விளையாட்டு வயலின் வாங்கி வருவதாகச் சொல்லியிருந்தார். ஆனால் வாங்கி வரவில்லை. மறந்துவிட்டார். ''வயலின் பொம்மை எங்கே?'' என்று தந்தையிடம் .கேட்ட சமயம் வி. பி. ராமனுக்கு வயது ஏழு.

வீட்டில் அப்போது பரூர் சுந்தரம் ஐயர் இருந்தார். ராமனின் தாயார் இசையில் நன்கு தேர்ச்சி பெற்றவர். வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டு, கீர்த்தனைகளை திரு சுந்தரம் ஐயர் முன் வாசிப்பார்.

'பொம்மை வயலின் ஏன் வாங்கி வரவில்லை?' என்று ராமன் தந்தையிடம் திரும்பத் திரும்பக் கேட்டதைப் பார்த்த சுந்தரம் ஐயர் மறுநாள் ''விளையாட்டு வயலின் எதற்கு? இதோ நிஜ வயலினே கொண்டு வந்திருக்கேன்!'' என்று சொல்லி, சிறிய பிடில் ஒன்றை ராமனுக்குக் கொடுத்தார். அவரே கற்றுக் கொடுக்கத் தொடங்கினார்.

'சர்ச் பார்க் கான்வென்ட்' படிப்புடன் வீட்டில் தினமும் வயலின் பாடமும் நடந்தது. திருவாளர்கள் ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி, டி. கே. ஜயராம ஐயர், திருப்பாற்கடல் சீனிவாச ஐயங்கார் ஆகியோரிடம் இசைப் பயிற்சி பெற்றார். கடைசியில் பிரபல வித்வான் 'பாபா' வெங்கடராமய்யாவிடமும் சில நாட்கள் சிக்ஷை பெற்றிருக்கிறார்.

1962ல் சென்னை உயர்நீதி மன்றம் நூற்றாண்டு விழாக் கொண்டாடிற்று. அப்போது நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கடராம ஐயர் கச்சேரி செய்ய முன்வந்தார். வயலின் வாசிக்க வி. பி. ராமனையும், மிருதங்கத்துக்கு மற்றொரு வழக்கறிஞர் திரு ஸ்ரீவத்ஸமணியையும் அழைத்தார். சட்ட நிபுணர்கள் வழங்கிய சங்கீதம் கட்டடத்தை நிறைத்தது.

''நீங்கள் மேடைக் கச்சேரிகள் செய்திருக்கிறீர்களா?'' என்று கேட்டேன்.

''இல்லை. 'ஹாபி' என்ற முறையில்தான் வாசிக்கிறேன். ஆனாலும் தீவிர ஈடுபாட்டுடன் பயின்றிருக்கிறேன். அடிக்கடி வயலின் கச்சேரியைப் பொது இடங்களில் செய்தால், 'வக்கீல் தொழிலில் வரும்படி இல்லைபோலிருக்கு' என்று கூறிவிடுவார்கள். அந்தப் பேச்சுக்கு இடம் கொடுப்பானேன்?'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார் திரு வி.பி. ராமன்.

— பேட்டி : **ஏ. சுவாமிநாதன்**

# தொழில் மேதைக்குச் சிலை



தமிழகத்திலும் அதற்கு அப்பாலும் தொழில் உலகில் மிகப் பிரபலமடைந்துள்ள ''டி. வி. எஸ்.'' என்ற மூன்றெழுத்துக்கள் குறிக்கும் டி. வி. சுந்தரம் அய்யங்காரின் உருவச் சிலையை, சென்னை மவுண்ட் ரோட் சுந்தரம் மோட்டார்ஸ் ஸ்தலத்தில் சென்ற ஜூலை 18ந் தேதி சென்னைப் பிரதம நீதிபதி திரு கே• வீராசாமி திறந்து வைத்து டி. வி. எஸ்ஸின் வாழ்க்கை பற்றியும் அவருடைய சிறப்புக் குணங்களாகிய நன்னெறி, தளராத உழைப்பு முதலியவை குறித்தும் விரிவாக விளக்கமாகப் பேசினார். நல்வாழ்வு வழிக்கு அமைச்சர் திரு நெடுஞ்செழியன் டி. வி. எஸ். வாழ்க்கை ஏனையோருக்கு வழிகாட்டியாக இருக்கிறதென்று புகழ்ந்து பேசினார். சிறப்பு மலர் ஒன்றை வெளியிட்டார் திரு ஏ. என். சிவராமன். ஸ்ரீ சுந்தரம் அய்யங்காரின் வாரிசுகளும் அவருடைய பெருமைக்குப் பெருமை சேர்க்கும்படியாக ஸ்தாபனத்தை நிர்வகித்தும் விரிவுபடுத்தியும் வருவது போற்றத்தக்கது. டி. வி. எஸ். ஸ்தாபனங்கள் ஆற்றும் பணி மேலும் சிறக்குமாக.

உங்களுக்கு ஜலதோஷம் வரும்போலிருந்தால்

## ரபெக்ஸ் பாதுகாப்பளிக்கும்

# ரபெக்ஸ்

## ஜலதோஷத்திற்கு தீவிரமாகச் செயல்புரியும், எரிச்சலற்ற நிவாரணி

குளிரும், ஈரப்பதமும் நிறைந்த சீதோஷ்ண நிலையில் பாதுகாப்பளிக்கிறது. உங்களுக்கு ஜலதோஷம் உள்ளபோது - மார்பில் அடைசலை அகற்றி, மூக்கடைப்பைப் போக்கி இதமான நிவாரணமளிக்கிறது.

- 65 கிராம் மற்றும் 20 கிராம் ஜாடிகளிலும், 6 கிராம் டின்களிலும் கிடைக்கிறது.

ரபெக்ஸ் எப்பொழுதும் கைவசம் இருக்கட்டும்.




அலெம்பிக்கின்
ஹோம்பர்ே
பிரிவின் தயாரிப்பு



ஜலதோஷத்திலிருந்து
நிவாரணமளிக்கிறது
**ரபெக்ஸ்**

everest/968i/ACW tm

# ராமாயணம்

ராஜாஜி

லக்ஷ்மணன் கோபம் தணிந்து உள்ளே சென்முன்.

கோபம் தணிந்த நிலையில் வந்த லக்ஷ்மணனைப் பார்த்து சுக்ரீவன் மிகச் சந்தோஷப்பட்டு ஆசனத்திலிருந்து இறங்கி வணங்கினான்.

"நான் எந்தக் குற்றம் செய்திருந்தாலும் மன்னிக்க வேண்டும். ராகவனுடைய சிநேகத்தாலும் வீரத்தாலும் அல்லவா நான் ராஜ்ய பதவியை அடைந்தேன். ராமன் செய்த உபகாரத்தை நான் மறப்பேனு? ராமனுடைய பராக்கிரமத்தை நான் அறிந்தவன் அல்லவா? என் துணையே இல்லாமல் பகைவர்களை நாசம் செய்யும் பலம் அவனுக்கு உண்டு என்பது எனக்குத் தெரியும். நான் என் சேனைகளுடன் அவரைப் பின்பற்றிச் செல்வேன்; அவ்வளவே. நிச்சயமாக ராவணன் அழிவான். சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடுகள் உடனே செய்யப்படும். நான் செய்த தாமதத்தை மன்னிப்பீர்களாக" என்று சுக்ரீவன் லக்ஷ்மணனிடம் சொன்னான்.

இதைக் கேட்ட லக்ஷ்மணன் மகிழ்ச்சி அடைந்தான்.

"உன்னைப் போன்ற தீரன் ராமனைத் தவிர வேறு யாருமில்லை. நிச்சயமாகம் வந்து ராமனைக் கண்டு அவன் துயரத்தைத் தணிக்கும் வார்த்தைகளைச் சொல்வாயாக" என்றான்.

* * *

ஒரே சிவிகையில் சுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஏறிச் சென்றார்கள். ஏற்கெனவே செய்யப்பட்ட ஏற்பாடுகளையெல்லாம் ராமனுக்குச் சொல்லி அவனைத் திருப்திப்படுத்தினார்கள்.

ராமன் சந்தோஷமாகப் பேசினான்:

"உன்னைப் போன்ற நண்பன் உலகத்தில் வேறொருவனில்லை. மேகங்கள் மழை பெய்வதைப் போலும், சூரியன் இருளை நீக்குவதைப் போலும், சந்திரன் மக்கள் உள்ளத்தைக் குளிரச் செய்வது போலும், யாருடைய ஏவுதலுமில்லாமல் உதவுவது உண்மை நண்பனுடைய சுபா



வம். உன் நட்பை நான் சம்பாதித்தது என் பாக்கியம். இனி ராவணன் அவன் குலத்துடன் நிர்மூலமாவது நிச்சயம்.''

இவ்வாறு ராமன் தன் நன்றியை யையும் மகிழ்ச்சியையும் சுக்ரீவனிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, பெரும் கூட்டமாக வானர வீரர்கள் தத்தம் சேனைகளுடன் சுக்ரீவன் அனுப்பி யிருந்த உத்தரவின்படி பல் வேறு காடுகள், மலைகள், சமுத்திரக் கரைகளிலிருந்து வந்து சேர்ந்து விட் டார்கள். அவர்கள் கிளப்பிய தூசி யால் ஆகாயம் மறைந்து இருள் மூடி விட்டது.

பல்வேறு வடிவமும் நிறமும் கொண்ட வானரர்களும் கரடிகளும் கோடிக் கணக்காகக் குழுமிவிட்டார்கள். இந்த மாபெரும் சேனைக்குச் சொல்ல வேண்டியதைத் தகுந்தபடி சொல்லி அவரவர்களுக்குத் தாற்காலிகமாக இருக் கும் இடம் சுக்ரீவன் நியமித்தான்.

பிறகு யோசித்துச் சேனாதிபதிகளை எட்டுத் திக்குகளுக்கும் அவரவர் களைச் சேர்ந்த வானரக் கூட்டங்க ளோடு சென்று சீதையைத் தேட உத்தரவிட்டான்.

இவ்விடத்தில் ஒரு விஷயத்தை எடுத் துக் காட்டலாம். கம்ப ராமாயணத் தில் தாரையின் குணத்துக்குக் களங் கமோ, குறையோ ஏதுமில்லாமல், வாலி இறந்த பின் அவளை விரதம் காத்த கற்பரசியாகச் சித்திரிக்கப்பட் டிருக்கிறது. வால்மீகி ராமாயணத்தில் அப்படி இல்லை. வாலி இறந்த பின் சுக்ரீவன் வசத்தில் ராஜ்யாதிகாரத் துடன் தாரை உட்பட அந்தப்புரம்



## சைப்ரஸ் பழமொழிகள்

முட்டையின்மீது கல் விழுந்தால் முட்டையின் கதி அதோகதி; கல்லின் மீது முட்டை விழுந்தாலும் முட்டையின் கதி அதோகதி.

தூக்கத்திலகூட நரி கோழியைப் பற்றியே கனவு காண்கிறது.

துருப் பிடிப்பதைவிடத் தேய்ந்து போவது எவ்வளவோ நல்லது.

சுதந்திரத்தை நாம் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமானால், அதை ஓர் அளவுக்குள் வைத்திருக்க வேண்டும்.

—'ரமணன்'

முழுவதும் சேர்ந்து விட்டதாக வைத்துக்கொண்டு விஷயங்கள் சொல்லப்படுகின்றன. சுக்ரீவன் கிராம்மிய சுகப் பரவசனாகிப் போய் மதுபானத்திலும், மூழ்கி ராம காரியத்தை மறந்து கிடந்த போது தாரா தேவியையும் அதில் சேர்த்தே குறிக்கப்பட்டிருக்கிறது.

பழைய ராஜ குல சம்பிரதாயத்திலும், வேறு குலங்களிலும் அண்ணன் இறந்த பின் புருஷனை இழந்த அண்ணன் மனைவியைக் குலத்துக்கு எஜமானனான தம்பி தன் மனைவியாகச் சேர்த்துக் கொள்ளும் வழக்கம் இருந்து வந்தது. அது அந்தக் காலத்து ஆசாரம். ஒரு காலத்து வழக்கத்தின் நன்மை தீமைகளை இன்னொரு யுகத்தில் ஆராய்ந்து உணர்வது கடினம். அதற்கு விசால நோக்கமும் கற்பனா சக்தியும் வேண்டும்.

இந்தக் காலத்துச் சூழ்நிலைகளைக் கொண்டு ஆராய்ந்தாலும் ஒன்று வெளிப்படை. புருஷனில்லாத ஒரு ஸ்திரீ எஜமானனிடம் நெருங்கிப் பழகும் அவசியம் ஏற்பட்டால், அந்த ஸ்திரீயைப் பற்றி மக்களின் வாயை அடக்குவது கஷ்டம். விவாகம் செய்து கொண்டு விட்டால் இந்த அபாயம் இல்லை.

தவிர, வால்மீகி முனிவருடைய சித்திரத்தை வைத்துக் கொண்டாலும் நாம் தாரை பேரில் குற்றம் சாட்ட முடியுமா? அவள் மகா சாமர்த்திய சாலி; ராஜ நீதியும், உலகப் போக்கும் நன்றாய் அறிந்தவள்; வரப்போகும் சுக துக்கங்களை முந்தியே தெரிந்து கொள்ளும் சக்தியைப் பெற்றவள். வாலி இறந்த பின் அங்கதனைப் பற்றியே அவளுடைய பெருங் கவலை. இந்தக் காரணத்தாலேதான் அவள் சுக்ரீவனுக்கு அடங்கிப் போனாள் என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

நம்முடைய இக்காலத்து நடவடிக்கைகளைத்தான் பார்ப்போமே. மனைவியை இழந்து அழுது புரண்டு அந்தரங்க சுத்தியுடன் துக்கப்பட்டு ஆண் மக்கள் எத்தனையோ பேர் மறுபடியும் விவாகம் செய்து கொள்வதைப் பார்க்கிறோமே! முன் காதலித்த மனைவியின் நினைவை நன்றாகக் குறைவின்றிக் கௌரவித்தே இப்படிச் செய்கிறதையும் பார்க்கிறோம். யோக்கியமாக இருப்பதையும் பார்க்கிறோம். அதில் யாதொரு தவறும் காண்பதில்லை. ஆண் மக்களின் நடவடிக்கைக்கு ஒரு தருமம், ஸ்திரீகளுக்கு வேறு தருமமா? தாரையை ஏன் குற்றம் சொல்ல வேண்டும்? கற்பு என்பது இரு பாலாருக்கும் ஒன்றே.

வாலி இறந்த பின் தாரை அந்தப் புரத்துக்கு யஜமானித் தாயாக விளங்கி சுக்ரீவனையும் அங்கதனையும் தன்னுடைய நுட்பமான புத்தியும் அறிவும் கொண்டு நன்றாகக் காப்பாற்றி வந்தாள். இது வால்மீகி ராமாயணத்தில் காணும் தாரை. கம்பருடைய தாரையோ விரதம் காத்து வந்த களங்கமற்ற விதவையாகவும் ராஜ மாதாவாகவும் விளங்குகிறாள். இது நம்முடைய மனத்துக்கு மிகப் பிடித்தமான புனிதச் சித்திரமாக இருக்கிறது. ஆனால் மற்றொன்றும் உலகானுபவத்துக்குப் பொருந்தியதாகத்தான் இருக்கிறது.

வால்மீகி ராமாயணத்திலும் பின்னால் ஓரிடத்தில் கம்பருடைய சித்திரத்துக்கு ரொம்ப இடம் தரும் வழியில் சொல்லப் பட்டிருக்கிறது. (சுந்தர காண்டம் 13:28) இலங்கையில் சுர்ந்து தேடித் தேடிச் சீதையைக் காணவில்லை என்று துக்கத்தில் மூழ்கி, இனி என்ன செய்யலாம்; கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போய் முயற்சி எல்லாம் வீணாயிற்று என்று தெரியப்படுத்தினால் என்னவெல்லாம் நேரிடுமோ என்று ஹனுமான் ஆராய்கிறான். அங்கே சொல்லப்படுகிறது வால்மீகி ராமாயணத்திலேயே: "சீதையைக் காணாமல் திரும்பினேனானால் சுக்ரீவன் இறப்பான். புருஷன் இறந்த பின் ருமை உயிர் வைத்திருக்க மாட்டாள். வாலி கொல்லப்பட்ட காலத்திலிருந்து துக்கத்தில் மூழ்கித் துரும்பாக இளைத்துப் போய் உயிரைத் துறக்கவே விரும்பி வரும் வானர அரசி தாரையும் உயிரை நீப்பாள்." இவ்வாறு வால்மீகி ராமாயணத்தில் சொல்லப் பட்டிருப்பது கம்பருடைய சித்திரத்துக்குச் சரியாக இருக்கிறது. இதை வைத்தே கம்பர் தம் ஒப்பற்ற கற்பனா சக்தியைச் செலுத்தி முழுச் சித்திரத்தையும் அதற்குத் தகுந்தவாறு உண்டாக்கிக்கொண்டு சில விஷயங்களை மாற்றிச் சரிப்படுத்திப் பாடியதாக எண்ணுகிறேன். (தொடரும்)



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதினாறாம் அத்தியாயம்

## "மலையமானின் கவலை"

மாளிகைக்கும் மதில் சுவருக்கும் இடையிலிருந்த நிலா முற்றப் பகுதியில் கந்தமாறன் வழி காட்டிக் கொண்டு செல்ல, கரிகாலன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நடந்தான். மற்ற நால்வரும் பின் தொடர்ந்து சென்றார்கள்.

குரவைக் கூத்துக்காக மேடையும், கொட்டகையும் போட்டிருந்த இடத்தை அடைந்ததும் கரிகாலன் நின்றான்.

''ஓகோ! இது என்ன? இங்கே என்ன நடக்கப் போகிறது?'' என்று கேட்டான்.

''கோமகனே! தங்களுக்கு விருப்பமாயிருந்தால், இங்கே குரவைக் கூத்து வைக்கலாம் என்று உத்தேசம்....''

''ஆகா! ரொம்ப நல்லது! குரவைக் கூத்து வையுங்கள். வில்லுப் பாட்டு வையுங்கள். கரிகால் வளவர் நாடகம் விஜயாலயசோழர் நாடகம் எல்லாம் வையுங்கள். பகலெல்லாம் காட்டில் வேட்டையாடுவதில் கழிப்போம். இரவெல்லாம் பாட்டிலும் கூத்திலும் கழிப்போம். சம்புவரையரே! என் பாட்டன் மலையமான் எனக்கு என்ன சொல்லி அனுப்பினான், தெரியுமா! கடம்பூர் சம்புவரையன் மாளிகையில் இருக்கும்போது, 'இரவில் தூங்காதே!' என்று எச்சரிக்கை செய்தான். நான் என் பாட்டனுக்கு என்ன மறுமொழி சொன்னேன், தெரியுமா? 'பாட்டா! நான் பகலிலும் தூங்குவதில்லை; இரவிலும் தூங்குவதில்லை. நான் தூங்கி மூன்று வருஷம் ஆகிறது. ஆகையால் நான் தூங்கும்போது விரோதிகள் எனக்கு ஏதேனும் தீங்கு செய்து விடுவார்கள் என்று பயப்பட வேண்டாம். நான் விழித்துக் கொண்டிருக்கும்போதே யாராவது தீங்கு செய்தால்தான் செய்யலாம். அவ்



கோவலூர் கிழவனரின் வீண் கவலையைப் பற்றி உங்களுக்குச் சொன்னேன். வயதாகி விட்டதல்லவா? சில பேருக்கு வயதானல் மனேதைரியம் குறைந்து விடுகிறது. அடுத்தாற்போல், என் பழுவூர்ப் பாட்டனைப் பாருங்கள்! எவ்வளவு மிடுக்காக நடந்து வருகிறார்! அறுபது பிராயத்தைக் கடந்தவர் என்று யாராலாவது சொல்லமுடியுமா?'' என்று கூறிச் சிறுநகை செய்தான் கரிகாலன்.

பழுவேட்டரையர் இதற்கு மறுமொழி ஏதேனும் சொல்ல வேண்டும் என்று எண்ணித் தமது தொண்டையைக் கனைத்துக் கொண்டார். அது சிங்க கர்ஜனையைப் போல் முழங்கியது.

''பாருங்கள்! பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்தால் பாரெல்லாம் நடுங்கும் என்று சொல்வது எவ்வளவு சரியாக இருக்கிறது! கந்தமாறு! வந்தியத்தேவா! பார்த்திபேந்திரா! நீங்கள் எல்லாம் பழுவூர்ப் பாட்டன் வயதில் இவ்வளவு திடமாக இருப்பீர்களா என்று யோசித்துப்

வளவு துணிச்சலுள்ள ஆண்மகன் யார் இருக்கிறான்?' என்று மலையமானுக்குத் தைரியம் சொல்லி விட்டு வந்தேன்!'' என்று கூறிவிட்டுக் கரிகாலன் கடகடவென்று சிரித்தான்.

சம்புவரையர் கோபத்தினால் நடுங்கிய குரலில், ''ஐயா! தாங்கள் தூங்கினாலும் சரி, விழித்துக் கொண்டிருந்தாலும் சரி... தங்களுக்கு எவனும்...இந்த மாளிகையில் இருக்கும்போது... தீங்கு செய்யத் துணியமாட்டான்!'' என்றார்.

''ஆம், ஆம்! கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குள் எனக்குத் தீங்கு செய்யக் கூடியவன் யார் இருக்க முடியும்? அல்லது வெளியிலிருந்து இவ்வளவு பெரிய மதிள் சுவர்களைத் தாண்டி யார் வர முடியும்? யமன்கூட வர முடியாது.. கடம்பூர் சம்புவரையர் என்றால் யமன் கூடப் பயப்படுவானே? அந்தத் திருக்

பாருங்கள். ஒருவேளை அவரைப் போல் தொண்டையைக் கனைப்பீர்கள். ஆனால் அவர் வயதில் அந்தப்புரத்துக்குப் புதிய பெண்ணைக் கொண்டுவர மாட்டீர்கள். தாத்தா! தங்களுடன் இளைய ராணியையும் அழைத்து வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே! முன்வாசல் மாடத்தில் பார்த்தேன்! இளைய ராணி எப்படிப் பிரயாணம் செய்து வந்தார்கள்? மூடு பல்லக்கிலா, ரதத்திலா? அல்லது வண்டியிலா?''

பழுவேட்டரையர் அப்போது குறுக்கிட்டு, ''யானை மீது அம்பாரியில் வைத்து நாடு நகரமெல்லாம் அறிய அழைத்து வந்தேன்!'' என்று பெருமிதத்துடன் கூறினார்.

''அப்படித்தான் செய்ய வேண்டும், தாத்தா! இனிமேல் எப்போதும் அப்படியே செய்யுங்கள். மூடு பல்லக்கில் மட்டும் அழைத்து வர வேண்டாம். அதனால் பல விரஸமான வதந்திகள் ஏற்படுகின்றன. ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கில் சில சமயம் என் சித்தப்பன் மதுராந்தகன் இரகசியமாக ஏறிக்கொண்டு ஊர் ஊராகப் போய் வருகிறானாம்! இப்படி ஒரு வதந்தி நாடு எங்கும் பரவியிருக்கிறது!'' என்று ஆதித்த கரிகாலன் கூறி இடி இடி என்று சிரித்தான்.

ஆனால் அங்கிருந்த மற்றவர்கள் யாரும் சிரிக்கவில்லை. ஒவ்வொருவர் மனத்திலும் ஒவ்வொரு விதக் கலக்கம் ஏற்பட்டது.

வந்தியத்தேவன் தன் மனத்துக்குள், ''ஐயோ! எப்பேர்ப்பட்ட தவறு செய்து விட்டோம்! இந்த வெறிபிடித்த மனிதரிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டோமே! ஒன்றையும் மிச்சம் வைத்துக்கொள்ளாமல் பகிரங்கப்படுத்திவிடுவார் போலிருக்கிறதே!'' என்று எண்ணிக் கலங்கினான்.

பெரிய பழுவேட்டரையரின் உள்ளம் எரிமலையின் உட்பிரதேசத்தைப் போல் தீயும் புகையுமாகக் குழம்பிக் கொதித்துக் கனன்றது. தீயும் புகையும் எரிமலை வாயின் வழியாக வருவதற்கு முன்னால் உண்டாகும் பயங்கர உறுமலைப் போல் அவர் மீண்டும் தொண்டையைக் கனைத்துக்கொண்டார்.

அவர் பேசுவதற்கு முன் பார்த்திபேந்திரன் ஓர் அடி முன்னால் பெயர்ந்து வந்து, ''கோமகனே! பழுவூர் இளைய ராணியை நான் வெகு சிறிய காலந்தான் பார்த்துப் பழக நேர்ந்தது. அதற்குள்ளேயே அவர் எத்தகைய பத்தினித் தெய்வம் என்பதை அறிந்து கொண்



டேன். பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் அவதூறு கூற முற்பட்டால் அவனை இந்தக் கணமே என் வாளுக்கு இரையாக்குவேன்! இது சத்தியம்!'' என்று சொன்னான்.

கந்தமாறன் பின்னால் ஓரடி வந்து நின்று, ''என் கையில் கத்தி எடுக்க வேண்டிய அவசியமே இல்லை. பழுவூர் இளைய ராணியைப் பற்றி அவதூறு கூறுகிறவனை என் கையினாலேயே கழுத்தை நெரித்துக் கொன்று விடுவேன். இது சத்தியம்!'' என்றான்.

இதைக் கேட்ட வந்தியத்தேவனும் ஓரடி முன்வந்து, ''நானும் அப்படித்தான்! பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் தவறாகப் பேசினால், என் கண் பார்வையினாலேயே அவனைச் சுட்டெரித்து விடுவேன்!'' என்றான்.

''ஆஹா ஹா! கொஞ்சம் பொறுங்கள், நண்பர்களே! என்னிடமே சண்டைக்கு வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே! பார்த்தீர்களா, தாத்தா! தமிழ்ப் பெண் குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதில் இவர்கள் எவ்வளவு துடிப்புடன் இருக்கிறார்கள்! ஆனால் பழுவூர் இளைய ராணியைப் பற்றி யாரும் அவதூறு சொல்லவில்லை. சொன்னால் நானும் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க மாட்டேன். இந்த வீராதி வீரர்கள் வரும்வரையில் அப்படி அவதூறு சொன்னவனை நான் உயிரோடு வைத்திருக்க மாட்டேன். பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கைப் பற்றித்தான் குறை சொல்லுகிறார்கள். அந்தக் கோழை மதுராந்தகன் பழுவூர் ராணியின் மூடு பல்லக்கில் ஊர் ஊராக இரகசியப் பிரயாணம் செய்கிறானாம்! எப்போது ஆண் மகன் ஒருவன் மூடு பல்லக்கில் இரண்டு பக்கத்திலும் திரை விட்டுக் கொண்டு பிரயாணம் செய்கிறானோ அப்போது இளைய ராணியும் அப்படிப் பிரயாணம் செய்தால் சில அனர்த்தங்கள் விளையக்கூடும் அல்லவா?....''

''கோமகனே! பராந்தக சக்கரவர்த்தியின் பேரனும் கண்டராதித்தருடைய திருமகனுமான மதுராந்தகத் தேவர் எதற்காக மூடு பல்லக்கில் பிரயாணம் செய்ய வேண்டுமாம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?'' என்றான் பார்த்திபேந்திர பல்லவன்.

''அதன் காரணமும் ஒரு வேடிக்கையான காரணம்தான்! மதுராந்தகன் மூடு பல்லக்கில் ஏறிக் கொண்டு ஊர் ஊராகப் போய்த் தன் கட்சிக்குப் பலம் திரட்டிக் கொண்டு வருகிறானாம்!....''

''எதற்காகப் பலம் திரட்டுகிறது?''

''எதற்காகவா? என் தகப்பனாருக்குப் பிறகு சோழ ராஜ்ய சிம்மாசனத்தில் அவன் ஏறுவதற்காகத்தான்! எப்படி இருக்கிறது கதை! சில மாதங்களுக்கு முன்பு ஒருநாள் இந்தக் கடம்பூர் மாளிகைக்குக்கூட அப்படி அவன் மூடு பல்லக்கில் இரகசியமாக வந்திருந்தானாம்! நள்ளிரவில் சதியாலோசனைக் கூட்டம் ஒன்று இங்கே நடந்ததாம். பார்த்திபேந்திரா! திருக்கோவலூர்க் கிழவனார் நீயும் என்னுடன் இருந்தபோது தானே இதையெல்லாம் சொன்னார்? மதுராந்தகனுக்குச் சிம்மாதனம் ஏறுவதற்கு உள்ள ஆர்வத்தினால் அவசரப்பட்டு என் தந்தையைக் கொஞ்சம் சீக்கிரமாகவே சொர்க்கத்துக்கு அனுப்பினாலும் அனுப்பிவிடுவான் என்று சொன்னாரே? அதெல்லாம் உனக்கு நினைவில்லையா?''

''நினைவுக்கு வருகிறது, இளவரசே! அதையெல்லாம் அப்போதும் நான் நம்பவில்லை; இப்போதோ, சிறிதுகூட நம்பவில்லை. தஞ்சாவூருக்குப் போய்த் தங்கள் தந்தையை நேரில் தரிசித்து விட்டு வந்த பிறகு....''

''நீ மட்டும் என்ன? நானுங்கூடத்தான் நம்பவில்லை. நம்பியிருந்தால் இந்தக் கடம்பூர் மாளிகைக்கு விருந்தாளியாக வந்திருப்பேனா?'' என்று கூறிக் கரிகாலன் மீண்டும் எதையோ நினைத்துக் கொண்டவன் போல் சிரித்தான்.

கடம்பூர் சம்புவரையர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு ''கோமகனே! திருக்கோவலூர் மலையமான் குலத்துக்கும் எங்கள் குலத்துக்கும் நீண்ட கால விரோதம் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும்!'' என்றார்.

''தெரியாமல் என்ன? அந்த விரோதத்தைப் பற்றிச் சங்கப் புலவர்கள் பாடியிருக்கிறார்களே? கொல்லிமலை வல் வில் ஓரியை மலையமான் திருமுடிக் காரி சண்டையில் கொன்றான். வல்வில் ஓரியின் வம்சத்தில் நீங்கள் வந்தவர்கள். ஆகையால் அந்த விரோதத்தை இன்னமும் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்..''

''கோமகனே! வல்வில் ஓரியின் சாவுக்கு உடனே பழி வாங்கப்பட்டது. வல்வில் ஓரியின் உறவினனாகிய அதிகமான் நெடுமானஞ்சி திருக்கோவலூர் மீது படையெடுத்துச் சென்று அந்த ஊரையும் அழித்தான்; மலையமானுடைய முன்னோர் மலைக் கோட்டையையும் தரைமட்டமாக்கினான்....''

''சம்புவரையரே! அதிகமான் மட்டும் தனியாக அந்தக் காரியத்தைச் செய்து விடவில்லை. என் முன்னோனாகிய

சோழன் கிள்ளி வளவனுடைய உதவியைக் கொண்டுதான் மலையமான் மீது அதிகமான் வெற்றி அடைந்தான். அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது எதற்கு?....''

''நாங்கள் மறந்துவிட்டாலும், மலையமான் மறப்பதில்லை. ஏதாவது எங்கள் பேரில் அவன் குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறான்.......''

''நான்தான் சொன்னேனே? கிழவருக்கு வயதாகி விட்டது; ஆகையால் புத்தியும் தடுமாறுகிறது. நான் இங்கே இருக்கும்போது எனக்கு ஆபத்து ஒன்றும் வராமல் பாதுகாப்பதற்காக அவர் ஒரு பெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வராமல் இருக்க வேண்டுமே என்றுகூட எனக்குக் கொஞ்சம் கவலையாக இருக்கிறது....''

''இளவரசே! அப்படி ஏதேனும் தங்களுக்குச் சந்தேகம் இருந்தால்...?'' என்று சம்புவரையர் தடுமாறினார்.

''எனக்குச் சந்தேகமா? இல்லவே இல்லை. மலையமானோடு எங்கள் உறவு இரண்டு தலைமுறையாகத்தான். பழுவேட்டரையரோடு எங்கள் உறவு ஆறு தலைமுறையாகத் தொடர்ந்து வந்திருக்கிறது. பழுவூர் அரசரே இங்கே வந்திருக்கிறார். அவர் சோழ குலத்துக்கு விரோதமாக ஏதும் செய்வார் என்று நினைக்க எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?'' என்று கரிகாலன் கூறிப் பைத்தியச் சிரிப்பு சிரித்தான்.

பழுவேட்டரையர் கம்பீரமான குரலில், ''இளவரசே! சோழ குலத்துக்கு விரோதமாக நான் எதுவும் செய்யமாட்டேன்; இது சத்தியம். தர்ம நியாயத்துக்கு விரோதமாகவும் எதுவும் எப்பொழுதும் செய்ய மாட்டேன். இது இருமடங்கு சத்தியம்!'' என்றார்.

''ஆமாம், ஆமாம்! தர்ம நியாயம் என்பதாக ஒன்று இருக்கத்தான் இருக்கிறது. அதைப் பற்றித் தங்களிடம் பேசித் தெரிந்து கொள்ளத்தான் வந்தேன். வேட்டையாடும் நேரமும், கூத்துப் பார்க்கும் நேரமும் போக ஒழிந்த நேரத்தில் சற்று தர்ம நியாயத்தையும் பற்றிப் பேசலாம். சம்புவரையரே! இந்தப் பிரம்மாண்டமான அரண்மனையில் நானும் என் சிநேகிதர்களும் தங்குவதற்கு எந்த இடத்தை ஏற்படுத்தியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான், கரிகாலன்.

''ஐயா! தங்களுக்கும் பழுவூர் மன்னருக்கும் பின்கட்டில் விருந்தினர் விடுதி முழுவதையும் ஒதுக்கி விட்டிருக்கிறோம். மற்றப்படி வரக்கூடிய சிற்றரசர்களையெல்லாம் என்னோடு முன்கட்டிலேயே வைத்துக் கொள்வேன்....''

''ஓகோ! இன்னும் சிற்றரசர்களும் வரப் போகிறார்களா?''

''ஆம்; இளவரசே! தங்களை இங்கே சந்திப்பதற்குச் சுற்றுப்புறமுள்ள குறுநில மன்னர்கள் எல்லாரும் ஆவலாயிருக்கிறார்கள். பலரும் வருவார்கள்.''

''வரட்டும்; வரட்டும்! எல்லாரும் வரட்டும்! ரொம்ப நல்லது. யோசித்து முடிவு செய்ய வேண்டியதை ஒரு வழியாக முடிவு செய்துவிடலாம். மதுராந்தகனுடைய சதியாலோசனை ஒருபுறம் இருக்கட்டும். நானே உங்களுடன் சேர்ந்து ஒரு சதியாலோசனை செய்ய விரும்புகிறேன். அதற்கு இந்த மாளிகையைக் காட்டிலும் தகுந்த இடம் கிடைக்காது!'' என்றான் கரிகாலன்.

## பதினேழாம் அத்தியாயம்

# பூங்குழலியின் ஆசை

**நா**கைப்பட்டினத்திலிருந்துகோடிக் கரை வரையில் சென்ற ஓடையில் பூங்குழலியின் படகு போய்க் கொண்டிருந்தது. பூங்குழலியோடு சேந்தன் அமுதனும் அப்படகில் இருந்தான். படகு கோடிக்கரையை நெருங்கிக் கொண்டிருந்தது.

ஓடைக் கரையில் தங்க நிறத் தாழம் பூக்கள் மடல் விரித்து மணத்தை அள்ளி எங்கும் வீசிக் கொண்டிருந்தன.

ஒரு தாழம்பூவின் மீது பச்சைக் கிளி ஒன்று பறந்து வந்து உட்கார்ந்தது. அது உட்கார்ந்த வேகத்தில் தாழம்பூ ஊஞ்சல் ஆடுவது போல் ஆடியது. பச்சைக் கிளியும் அத்துடன் ஆடிவிட்டுப் பிறகு அதன் தங்க நிற மடலைத் தன் பவள நிற மூக்கினால் கொத்தியது.

படகு நெருங்கியதும், பச்சைக் கிளி 'கிக்கி' 'கிக்கி' என்று கத்திக்கொண்டு பறந்தோடி விட்டது.

''பிறந்தால் பச்சைக் கிளியாகப் பிறக்க வேண்டும்!'' என்றாள் பூங்குழலி.

''நீ அவ்விதம் எண்ணுகிறாய்! அதற்கு எத்தனை கவலையோ, எவ்வளவு கஷ்டமோ, யார் கண்டது?'' என்றான் சேந்தன் அமுதன்.

''என்ன கவலை, கஷ்டமிருந்தாலும் இஷ்டம்போல் எல்லையற்ற வானத்தில் பறந்து செல்ல முடிகிறதல்லவா? அதைக் காட்டிலும் இன்பம் வேறு உண்டா?'' என்றாள் பூங்குழலி.

''அப்படிப் பறந்து இரியும் பச்சைக் கிளியைச் சிலர் பிடித்துக் கூண்டில் அடைத்து விடுகிறார்களே!'' என்றான் சேந்தன் அமுதன்.

''ஆமாம், ஆமாம்! அரண்மனைகளில் வாழும் இராஜ குமாரிகள் பச்சைக் கிளிகளைக் கூண்டுக்குள் அடைத்து வைக்கிறார்கள்! குரூர ராட்சஸிகள்! கிளிகளைக் கூண்டில் அடைத்துவிட்டு அவற்றுடன் கொஞ்சி விளையாடுகிறார்கள்! நான் மட்டும் ஏதேனும் ஓர் அரண்மனையில் சேடிப் பெண்ணாயிருந்தால், கூண்டில் அடைபட்ட கிளிகளுக்கு விஷம் வைத்துக் கொன்று விடுவேன். கிளிகளைப் பிடித்துக் கூண்டில் அடைக்கும் இராஜ குமாரிகளுக்கும் விஷத்தைக் கொடுத்து விடுவேன்....''

''நீ இப்போது பேசுவதைக் கேட்டால், உன்னையும் குரூர ராட்சஸி என்றுதான் சொல்லுவார்கள்.''

''சொன்னால் சொல்லட்டும்! நான் ராட்சஸியா யிருந்தாலும் இருப்பேன்; இராஜகுமாரியா யிருக்க மாட்டேன்.''

''இராஜகுமாரிகளின் மீது உனக்கு ஏன் இத்தனை கோபம், பூங்குழலி! பார்க்கப்போனால், அவர்கள் பேரிலும் பரிதாபப்பட வேண்டியதுதானே? கூண்டில் அடைபட்ட பச்சைக் கிளிகளைப் போலத்தான் அவர்களும் அரண்மனைக்குள் அடைபட்டுக் காலங் கழிக்க வேண்டி யிருக்கிறது. தப்பித் தவறி அவர்கள் வெளியில் புறப்பட்டால், எத்தனை கட்டுக்காவல்? எத்தனை இரகசியம்? எத்தனை ஜாக்கிரதை? உன்னைப் போல் அவர்கள் படகில் ஏறிக் கொண்டு தன்னந்தனியாக ஓடையிலும் கடலிலும் போக முடியுமா? இஷ்டப்படி துள்ளித் திரியும் மானைப் போல் காட்டில் சுற்றி அலைய முடியுமா?''

''அவர்களை யார் அடைந்து கிடக்கச் சொல்கிறார்கள்? நான் சொல்ல வில்லையே? இஷ்டமிருந்தால் அவர்களும் காட்டில் அலைந்து திரிவதுதானே?''

''இஷ்டம் மட்டும் போதாது. அவரவர்களுடைய பிறப்பு வளர்ப்பையும் பொறுத்தது. கிளியைப் போல் நீயும் வானத்தில் பறக்க விரும்புகிறாய். அது முடிகிற காரியமா? கடற்கரையில் நீ பிறந்து வளர்ந்தாய். அதனால் இவ்வளவு சுயேச்சையாக இருக்க முடிகிறது. அரண்மனையில் பிறந்து வளர்ந்தவர்களால் அது முடியாது. இன்னும் ஒரு விசித்திரத்தைக் கேள். சில நாள் கூண்டில் அடைபட்டு இராஜ குமாரிகளின் கையினால் உணவு அருந்திப் பழக்கப்பட்ட கிளிகள் பிறகு கூண்டைத் திறந்து விட்டாலும் ஓடிப் போகவே விரும்புவதில்லை. சிறிது தூரம் பறந்து வட்டமிட்டுவிட்டு, பிறகு 'கிறீச்' 'கிறீச்' என்று கத்திக் கொண்டு கூண்டுக்குத் திரும்பி வந்து விடும். தஞ்சையிலும் பழையாறையிலும் உள்ள அரண்மனைகளில் இதை நானே நேரில் பார்த்திருக்கிறேன்....''

''அவ்விதம் கூண்டில் அடைபடுவதற்கு நான் ஒரு நாளும் சம்மதிக்கமாட்டேன். நான் கிளியாயிருந்தால் சொல்கிறேன், என்னைக் கூண்டில் அடைத்து வைத்து அமுதூட்ட வரும் இராஜ குமாரியின் கையை வெடுக்கென்று கடித்து விடுவேன்....''

''கூண்டில் அடைபட்ட கிளியாயிருக்கவும் நீ விரும்ப மாட்டாய். அரண்மனையில் அடைபட்ட அரசிளங் குமரியாயிருக்கவும் நீவிரும்பமாட்டாயல்லவா?''

''மாட்டவே மாட்டேன். அதைக் காட்டிலும் விஷந் தின்று உயிரை விட்டு விடுவேன்!''

''அதுதான் சரி! அப்படியானால் அரண்மனையில் வாழும் இராஜகுமாரனைக் கலியாணம் செய்து கொள்ளவும் நீ ஆசைப்படக் கூடாது!''

கீழ்வானத்தில் கருமேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. அவ்வப்போது பளீர் பளீர் என்று மின்னல்கள் மின்னிக் கொண்டிருந்தன. இடியின் குமுறல் இலேசாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் கடைசியாகச் சொன்னதைக் கேட்டதும் பூங்குழலியின் கண்களிலிருந்து பளீர் என்று மின்னல் கற்றைகள் புறப்பட்டன.

''நான் இராஜ குமாரனைக் கலியாணம் செய்து கொள்ள ஆசைப்படுவதாக உனக்கு யார் சொன்னது?'' என்று கோபமாகக் கேட்டாள்.

''எனக்கு யாரும் சொல்லவில்லை. நானாகத்தான் சொன்னேன். உன் மனத்தில் அத்தகைய ஆசை இல்லாவிட்டால் நல்லதாய்ப் போயிற்று. நான் சொன்னதை மறந்துவிடு!'' என்றான் சேந்தன் அமுதன்.

சற்று நேரம் அந்தப் படகில் மௌனம் குடிகொண்டிருந்தது. சேந்தன்அமுதன் துடுப்பினால் படகு தள்ளும் சத்தமும், வறட்டுத் தவளைகளின் குரலும், கடற் பறவைகளின் ஒலியும், கடல் அலைகளின் ஓசையும், அவ்வப்போது கீழ்த் திசையில் இடிமுழக்கமும் கேட்டுக் கொண்டிருந்தன.

சேந்தன் அமுதன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு மனத்தையும் தைரியப்படுத்திக் கொண்டு, ''பூங்குழலி! என் அந்தரங்கத்தை வந்தியத் தேவன் உன்னிடம் வெளியிட்டதாகக் கூறினாய் அல்லவா? அதைப் பற்றி உன் கருத்தைத் தெரிவித்தால் நல்லது. அதோ கோடிக்கரையின் கலங்கரை விளக்கம் தெரிகிறது. இனி உன்னோடு தனியாகப்

பேசும் சந்தர்ப்பம் கிட்டாமற் போகலாம். நாளை நானும் புறப்பட்டுச் செல்ல வேண்டும். தஞ்சையில் என் தாயாரைத் தனியாக விட்டு வந்து வெகு நாளாகிறது!'' என்றான்.

''வந்தியத் தேவன் உனக்காக ஏன் தூது சொல்லவேண்டும்? உனக்கு வாய் இல்லையா? கேட்க வேண்டியதை நேரில் கேட்டு விடேன்!'' என்றாள் பூங்குழலி.

''சரி! கேட்கிறேன். நீ என்னைக் கலியாணம் செய்து கொள்வாயா?'' என்று சேந்தன் அமுதன் கேட்டான்.

'' எதற்காக என்னைக் கலியாணம் செய்து கொள்ளும்படி கேட்கிறாய்?'' என்றாள் பூங்குழலி.

''உன் பேரில் எனக்கு அந்தரங்கமான ஆசை இருக்கிறது. அதனாலேதான்!''

''அந்தரங்கமான ஆசை இருந்தால் கலியாணம் செய்து கொண்டுதான் தீர வேண்டுமா ?''

''அப்படியொன்றும் 'தீரவேண்டும்' என்பதில்லை. உலக வழக்கம் அப்படி இருந்து வருகிறது....''

'' உன்னைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு நீ என்ன தருவாய்? நான் வேண்டும் அரண்மனை வாழ்வும் ஆடை ஆபரணங்களும் யானை குதிரைகளும் பல்லக்கும் பணிப் பெண்களும் உன்னால் தர முடியுமா ?''

'' முடியாது; அவற்றுக்கெல்லாம் மேலான அமைதியுள்ள வாழ்க்கையைத் தருவேன். கேள், பூங்குழலி! தஞ்சை நகர்ப்புறத்தில் அழகான பூந்தோட்டத்தின் மத்தியில் என் குடிசை இருக்கிறது. அதில் என் அன்னையும் நானுந்தான் வசிக்கிறோம். நீ அங்கு வந்துவிட்டாயானால், உன் வாழ்க்கையே மாறுதல் அடைந்துவிடும். என் அன்னை உன்னை அன்போடு வைத்து ஆதரித்துப் பாதுகாப்பாள். பொழுது விடிந்ததும் எழுந்திருந்து நம் வீட்டைச் சுற்றியுள்ள கொடிகளிலும் மரங்களிலும் குலுங்கும்

---

**மண்ணின் மாண்பு**



# ஆக்கிரமிப்பு!

(1902 ஆனால் என்ன, 1957 ஆனால் என்ன? ஆப்பிரிக்காவின் ஆபத்தான சூழல் மாறாது என்று விளக்குகின்றன இந்தச் செய்திகள்.)

சிம்பா ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து நைரோபி போக்குவரத்து மானேஜருக்குச் செய்தி பறந்தது:

மார்ச் 1902

பிளாட்பாரத்தில் சிங்கம். டிரைவருக்கும் கார்டுக்கும் யார்டில் சிக்னல் செய்யாமல் செல்ல உத்தரவிடவேண்டும். கார்டு, பிரயாணிகளை இறங்கச் சொல்லாமல் இருப்பதோடு, அவரும் ஸ்டேஷன் காரியாலயத்தை ஜாக்கிரதையுடன் அணுக வேண்டும்.

டிஸாவோ ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து நைரோபி போக்குவரத்து மானேஜருக்கு மற்றொரு செய்தி:

மே 1921

இரண்டு மூன்று சிங்கங்கள் ரயில்வே நிலையத்தையும் வேலியையும் தாக்கின. அரை மணி நேரம் தொடர்ந்து மணி அடித்த பிறகு நகர்ந்தன. நானும் எனது இரண்டு மனைவியரும் மூன்று குழந்தைகளும் அபாயத்திலிருந்து தெய்வாதீனமாகத் தப்பினோம். வரும் ரயிலுக்கு லைன் கிளியர் செய்யத் தைரியமில்லை. இரண்டு சிங்கங்களையும் விரட்ட ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லாவிட்டால் நான் உயிரோடு இருப்பது சந்தேகம்தான்.

சிம்பா ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து நைரோபி போக்குவரத்துத் துறை அதிகாரிக்கு இந்த விநோதச் செய்தி கிடைத்தது:

ஏப்ரல் 1933

மகிந்து ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தகவல் தெரிவித்து, வரும் ரயில்களின் டிரைவர்களுக்கும் பிரயாணிகளுக்கும் இங்கே உயிருக்கு ஆபத்து விளையும் கஷ்டங்கள் காத்திருக்கின்றன என்று சொல்லச் செய்யுங்கள். நான்கு சிங்கங்கள் பலாத்காரமாக ரயில் நிலையத்துக்குள் நுழைந்து பிளாட்பாரத்தை ஆக்கிரமித்து விட்டன. எனது வேலைகளையெல்லாம் அவை செய்யத் தொடங்கி விட்டன. ரயில்வே ஸ்டேஷன் அவற்றின் 'கண்ட்ரோ'லில் உள்ளன.

புஜோகோ ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து அம்பாலா ஜில்லா போக்குவரத்து அதிகாரிக்குக் கீழ்க்கண்ட வாசகங்கள் கிடைத்தன:

ஜூன் 1955

72வது மைலில் ஒரு காட்டெருமை. காங்மேனைத் துரத்தியடித்தது. வேலை தடங்கல்... சீக்கிரம் அதைத் கட ஏற்பாடு செய்க...

மோம்பாஸா டிஸ்ட்ரிக் இன்ஜினியருக்கு கெஹனி ஸ்டேஷன்மாஸ்டர் அனுப்பிய அவசரச் செய்தி:

அக்டோபர் 1956

யானைகள் பாயிண்ட்ஸ்களையும் சிக்னல்களையும் இழுத்து விட்டன. சிக்னல் போட இயலவில்லை.

மோம்பாஸா டிஸ்ட்ரிக்ட் சூபரிண்டெண்டுக்குக் கங்கா உதனி ஸ்டேஷன் மாஸ்டர் அனுப்பிய அவசரத் தகவல் இது:

ஜனவரி 29, 1957

''யார்டு முழுக்கப் பதினெரு யானைகள். பாயிண்ட் போட மனிதர்களுக்குத் தைரியமில்லை!

(கிழக்கு ஆப்பிரிக்கப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி எழுதிய கட்டுரையிலிருந்து) - பி. எஸ். மணி



மலர்களை இருவரும் சேர்ந்து சித்திர விசித்திரமான மாலைகளாகக்கட்டலாம். மாலைகளை நான் தஞ்சைத் தனிக் குளத்தார் ஆலயத்துக்கும் துர்க்கா பரமேசுவரியின் ஆலயத்துக்கும் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருவேன். அதற்குள் நீ எங்கள் தோட்டத்திலுள்ள தாமரைக் குளத்தில் குளித்து விட்டு என் அன்னைக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்யலாம். மாலை நேரங்களில் நாம் மூவரும் தாமரைக்குளத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு போய்ப் பூச்செடிகளுக்கு ஊற்றலாம். மாலை ஆனதும் நான் உனக்கு அமுதினும் இனிய தெய்வத் தமிழ்ப் பதிகங்களைச் சொல்லிக் கொடுப்பேன். உன்னுடைய மதுரமான குரலில் அவற்றைப் பாடினால், பாடிய உன் நாவும் இனிக்கும்; கேட்கும் என் காதும் இனிக்கும். நமக்கு விருப்பம் இருந்தால் ஆலயங்களுக்குச் சென்று இறைவனைத் தரிசித்துவிட்டு அத்தெய்வப் பாடல்களைப் பாடிவிட்டு வரலாம். கோயிலுக்கு வரும் பக்தர்களும் கேட்டு மகிழ்வார்கள். பூங்குழலி! இதைக் காட்டிலும் இனிய வாழ்க்கை, மகிழ்ச்சி அளிக்கும் வாழ்க்கை உலகில் வேறு என்ன இருக்க முடியும்? யோசித்துப் பார்த்துச் சொல்லு!''

இவ்விதம் சேந்தன் அமுதன் கூறியதை யெல்லாம் கேட்டுவிட்டுப் பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.

''அமுதா! நீ இனியதென்று கருதும் வாழ்க்கையைப் பற்றிச் சொன்னாய்! ஆனால் நான் எத்தகைய வாழ்க்கை வேண்டுமென்று ஆசைப்படுகிறேன், தெரியுமா? வானுலகத்துக்குச் சென்று தேவேந்திரனை மணந்து கொள்ள ஆசைப்படுகிறேன். தேவேந்திரனுடன் ஐராவதத்தில் ஏறி வானத்தில் மேக மண்டலங்களுக்கு மத்தியில் பிரயாணம் செய்ய விரும்புகிறேன். தேவேந்திரனுடைய கையிலிருந்து வஜ்ராயுதத்தைப் பிடுங்கி மேகக் கூட்டங்களின் மீது பிரயோகிக்க ஆசைப்படுகிறேன். வஜ்ராயுதத்தினால் தாக்கப்படும்போது அந்தக் கரிய மேகங்களிலிருந்து ஆயிரம் பதினாயிரம் மின்னல்கள் கற்றை கற்றையாகக் கிளம்பி வான மண்டலத்தைச் சுக்கு நூறாகப் பிளப்பதைப் பார்க்க ஆசைப்படுகிறேன். இப்போதெல்லாம் வானத்திலிருந்து இடி விழுந்தால் எங்கேயோ கடலில் அல்லது காட்டில் விழுந்து மறைந்து விடுகிறதல்லவா? நான் அப்படி இடிகளை வீணாக்கமாட்டேன். அரசர்களும் அரசிகளும் இராஜகுமாரர்களும் இராஜ குமாரிகளும் வாழும் அரண்மனைகளாகப் பார்த்து அவற்றின் மேலே இடிகளைப் போடுவேன். அந்த அரண்மனைகள் இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணாவதைப் பார்த்துக் களிப்பேன். தேவேந்திரன் ஒருவேளை என்னை மணந்து கொள்ள இஷ்டப்படாவிட்டால் வாயுதேவனிடம் செல்வேன். அவனுக்கு ஏற்கனவே பல மனைவிகள் இருந்தாலும் பாதகம் இல்லையென்று என்னை மணந்து கொள்ளச் சொல்லுவேன். அவ்வளவுதான்; பிறகு இந்த உலகத்தில் எப்போதும் புயற் காற்றும் சுழிக் காற்றும் சண்டமாருதமும் அடித்துக்கொண்டேயிருக்கும். பெரிய பெரிய மரங்கள் பெயர்ந்து மாடமாளிகைகளின் மீது விழுந்து அவற்றை அழிக்கும். கடலில் போகும் மரக்கலங்கள் சண்டமாருதத்தினால் தாக்குண்டு துகள் துகளாகச் சிதறிப் போகும். அந்தக் கப்பல்களில் பிரயாணம் செய்வோர் கொந்தளிக்கும் கடலில் விழுந்து தவிப்பார்கள். அவர்களில் இராஜகுமாரர்களும் இராஜகுமாரிகளும் இருந்தால் அவர்கள் ஆழ் கடலின் அடிவாரத்துக்குப் போகட்டும் என்று விட்டு விட்டு, மற்றவர்களை மட்டும் போனால்போகிறதென்று தப்பவைப்பேன். வாயுதேவனும் ஒருவேளை என்னை மணந்து கொள்ள மறுத்தால் அக்கினி தேவனிடம் செல்வேன். அப்புறம் கேட்க வேண்டுமா? இந்த உலகமே தீப் பற்றி எரிய வேண்டியதுதான்!....''

''பூங்குழலி! போதும்! நிறுத்து! ஏதோ ஒரு மனக் கசப்பினால் இவ்விதமெல்லாம் நீ பேசுகிறாய். மனமறிந்து யோசித்துப் பேசவில்லை. உன் மனநிலையை அறிந்து கொள்ளாமல் உன்னிடம் நான் கலியாணப் பேச்சை எடுத்ததே என் தவறுதான். அதற்காக என்னை மன்னித்து விடு! கடவுள்தான் உன்னுடைய மனக் கசப்பைப் போக்கி அமைதி அளித்து அருள வேண்டும். அதற்காக நான்அல்லும்பகலும் பிரார்த்தனை செய்து வருவேன்!'' என்றான்.

உட்கார்ந்திருந்த பூங்குழலி திடீரென்று எழுந்து நின்றாள். ஓடைக் கரையில் இருந்த ஒரு மரத்தின் பக்கமாக உற்றுப் பார்த்தாள். சேந்தன் அமுதனும் அந்தத் திசையை நோக்கினான். மரக் கிளைகளின் மத்தியில் ஒரு பெண்மணியின் முகம் தெரிந்தது. சேந்தன் அமுதன் ஒருகணம் அங்கே நின்றவளின் முகத்தில் தன் அன்னையின் முகச் சாயலைக் கண்டு திகைத்துப் போனான்.

பின்னர், அவள் தன் அன்னை இல்லை என்பதை அறிந்து கொண்டான். பூதத் தீவில் வசிப்பதாகப் பூங்குழலி கூறிய தன் பெரியம்மாவாக இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

பூங்குழலி படகிலிருந்து தாவி ஓடைக் கரையில் குதித்து அந்தப்பெண்மணியை நோக்கி விரைந்து ஓடினாள். **(தொடரும்)**

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 42

புத்தர் கடவுள் இருப்பதாக நம்பவில்லை என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். சில நூல்களிலும் அப்படியே எழுதியிருக்கிறார்கள். இது சுத்தத்தவறு. பௌத்த மதத்தின் முக்கிய உபதேசத்துக்கு இது விரோதமாகும். கடவுள் இல்லை என்றால் புத்தருடைய உபதேசமெல்லாம் பயனற்றுப் போகும். புத்தர் நாஸ்திகர் என்று சொல்வது உண்மையல்ல. கடவுள் பெயரை வைத்து அந்தக் காலத்தில் நடைபெற்ற பல தவறான விஷயங்களை அவர் நிராகரித்தார். அவரை நாஸ்திகர் என்று எண்ணிக் குழப்பியதற்கு இதுவேதான் காரணம். யாரையாவது ஈசுவரன் துவேஷிப்பான் என்றால், அத்தகைய ஈசுவரன் இல்லை என்று புத்தர் கண்டிப்பாகச் சொன்னார். பூமியை ஆளும் அரசர்களைப் போல் அக்கிரமம் செய்தும், பொருளுக்காக அநியாயமாகச் சிலரை விரும்பியும் சிலரை வெறுத்தும் வரும் ஒரு கடவுள் இல்லை என்றுதான் புத்தர் சொல்வார். ஜீவ ஹிம்சை செய்து அதைப் பூஜையாகச் சமர்ப்பித்தால் அதைப் பெற்றுக் கொண்டு சந்தோஷப்படுவார் என்று எண்ணிய அறியாமையை அவர் மிகவும் வெறுத்தார். ஆண்டவன் படைத்த சாதுப் பிராணிகளின் உயிரை மாய்த்துச் செய்யப்பட்ட யாகங்களைக் கூடவே கூடாது என்று சொன்னார். ஆகவே புத்தர், கடவுளை அவனுக்கு உரிய அரியாசனத்தில் அமர்த்தினார். அவ்வளவேயொழிய, 'அவன் இல்லை' என்று சொன்னதில்லை. கருணை வள்ளலான ஈசனை மறந்து ஒரு குரூர அரக்கனை அவனுக்குப் பதிலாக வைத்துப் பூஜை செய்ததை ஒழித்து, மறுபடியும் உண்மை ஆண்டவனுக்கு மக்கள் உள்ளத்தில் இடம் செய்தார். வாழ்க்கையில் இன்றியமையாதது சீலம். தருமமே பிரபஞ்சத்தின் ஆட்சி முறை. அது என்றும் மாறாமல் நிலையாக நிற்கும் என்று புத்தர் ஹிந்து மதத்தில் சொல்லப்பட்டிருப்பதை ஊர்ஜிதப்படுத்திச் சொன்னார். தருமமே கடவுள் என்று சொன்னார்.

ஈசனுடைய செங்கோலும் சட்டமும் நிரந்தரமானது, என்றும்மாறுபடாதது. அவன் வேறும், அவன் சட்டம் வேறும் அல்ல. அவனுடைய பரிபூரண சுபாவத்துக்கே தருமம் என்று பெயர். பௌத்த மதத்தில் கடவுள் இல்லை, தருமம்தான் உண்டு என்று சிலர் அதைப் பற்றிக் குழப்பிக் கொள்வதற்கு இதுவே காரணம். இதனாலேயே நிர்வாணம் என்றால் இன்னது பொருள் என்று சரியாகப் புரிந்து கொள்ளாமல் வாதித்து வருவதும். நிர்வாணம் என்றால் சூன்யமாகப் போவது அல்ல. புத்தருடைய சரித்திரத்தினின்று நான் அறிந்து கொண்ட முக்கிய விஷயம் என்னவென்றால், நமக்குள் இருக்கும் குற்றங்கள் எல்லாம் கழிந்து முற்றிலும் நிர்மலமாவதுதான் நிர்வாணம். மாசுகள் தீர்ந்து அழிந்து போகவேண்டியதெல்லாம் அழிந்துவிட்டு பூரண சுத்தப் பொருள் ஆவதுதான் நிர்வாணம். நிர்வாணம் என்பது மயானமல்ல. ஆத்மா தனக்குரிய விடுதலை பெற்று வீடு அடைந்து பெறும் பேரின்பமே நிர்வாணம்.*

(யங் இந்தியா 24-11-27)

கடவுளுக்குக் கற்பித்த குரூர லட்சணங்களை அகற்றிவிட்டு உரிய ஸ்தானத்தில் அமர்த்தியது போக, புத்தர் உலகத்துக்குச் செய்த பெரும் பணி ஜீவ காருண்ய உபதேசம். எந்தப் பிராணியின் உயிரையும் துன்புறுத்தலாகாது என்று புத்தர் போதித்த உபதேசமே அவருடைய சிறந்த பணி.

(யங்-இந்தியா 20-1-27)

---

* நிர்வாணம் என்பது பௌத்த மதத்துக்கே உரிய தனி மொழி அல்ல. பகவத்கீதை இரண்டாவது அத்தியாயத்தில் கடைசி சுலோகத்தில் இந்தச் சொல்லைக் காணலாம். அந்த அத்தியாயத்தில் உபதேசிக்கப்பட்ட முறையில் மனிதன் வாழ்ந்தால் 'நிர்வாணத்'தை அடைவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் ஐந்தாவது அத்தியாயத்தில் 24, 25, 26வது சுலோகங்களிலும் ஆறாவது அத்தியாயத்தில் 15வது சுலோகத்திலும் 'நிர்வாண' நிலையைக் குறிப்பிட்டிருக்கிறது. நிர்வாணம் என்பது விடு அல்லது முக்தி.

# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கிவிட்டன

இந்திரா பார்த்தசாரதி

8

அமிர்தம் துணிந்து பானர்ஜி வீட்டு பார்ட்டிக்கு அன்று மாலை போகவேணும் என்று பொய் சொன்னான். திலகமும் அதை நிஜமென்று நம்பி அவனோடு எங்கேயாவது வெளியே போகவேண்டும்' என்ற எண்ணத்தை மாற்றிக் கொண்டாள்.

''நிச்சயமா அடுத்த ஞாயித்துக்கிழமை போவோம்....'' என்றான் அமிர்தம்.

''அப்போ ஒண்ணு செய்யறீங்களா?''

''என்ன?''

''சாணக்கியபுரி நேரு பார்க் பக்கம் இப்போ போவோம், கார் விடக் கத்துக் குடுங்க. மிஸஸ் ஐயர் என்ன ஜோரா கார் ஓட்டறாங்க!''

''இதோ பாரு, நீ எங்கே போகணுமோ அங்கே நான் அழைச்சுக்கிட்டுப் போறேன்.... உனக்கு ஏன் கார் விடற தொல்லையெல்லாம்....?''

''இந்த மாதிரிப் பிரியமாப் பேசற மாதிரி பேசி ஏமாத்தாதீங்க. நான் கார் விடத்தான் போறேன், நீங்க கத்துத் தரணும்!''

அவளிடம் வழக்காடுவதில் பயனில்லை என்று உணர்ந்த அமிர்தம், சோபாவிலிருந்து எழுந்திருந்தான்.

''அந்தப் பொண்ணை ஒரு நாளைக்குப் பார்க்கப் போவோமா...?''

''எந்தப் பொண்ணை?'' அமிர்தம் திடுக்கிட்டான். தரையில் விழுந்த புஸ்தகத்தைக் குனிந்து எடுத்தான்.

''பானுவை... சும்மாத்தான்..பானு தானே அவ பேரு?''

''எதுக்காகப் பார்க்கணும்?''

''அன்னிக்குப் பார்க்கறப்போ வீட்டுக்குக் கூப்பிடலையா? போய்ப் பார்த்தால் என்ன ?''

அன்று பானு திலகத்தை வீட்டுக்குக் கூப்பிடவில்லை என்று அவனுக்கு உறுதியாகத் தெரியும். ஆனால் திலகம் சொன்னதை அவன் மறுக்க விரும்பவில்லை. பேசாமல் இருந்தான்.

''என்ன போகலாமா?'' என்று கேட்டாள் திலகம்.

''ஒரு அர்த்தமுமில்லாமெ திடீர்னு போனால் ?''

''நேத்து நீங்க எப்படிப் போனீங்க? கோவிச்சுக்காதீங்க!''

''வீட்டுக்குக் காரிலே கொண்டு விட்டேன், அவ்வளவுதான், நானு போகலே.....''

''நீங்களா போனீங்கன்னு நான்சொல்லலியே....''

''அப்படிப் போனாலும் என்ன தப்பு? அவ வயசிலே நமக்கு ஒரு பொண்ணு இருக்காதா?....'' சே!.....தான் எப்பேர்ப்பட்ட வேஷதாரி!

''அப்படின்னா போவோமே... ஒரு வேளை நான் வரக் கூடாதா ?''

அசட்டுத்தனமாகப் பேசி மாட்டிக் கொண்டு விட்டோம் என்பதை அவன் உணர்ந்தான்.

'' ஆகட்டும் !... ஒரு நாளைக்குப் போவோம்....''

''சரி.... நான் இப்பொ தூங்கப் போறேன். நீங்க போறப்போ என்னை எழுப்புங்க.''

திலகம் சோபாவில் அப்படியே காலை நீட்டிக் கொண்டு படுத்தாள்.

அமிர்தம் புஸ்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு கட்டிலில் சற்றுச் சாய்ந்த நிலையில் உட்கார்ந்தான்.

திலகம் எதற்காகப் பானுவைப் பார்க்க விரும்புகிறாள்? எப்பேர்ப்பட்ட பெண் என்று அளவெடுக்கவா? அந்தப் பெண் நிச்சயம் இதைக் கண்டு கொள்வாள். திலகத்துக்கு நாசூக்காகப் பேசத் தெரியாது. இந்தச் சூழ்நிலையிலிருந்து எப்படித் தப்பித்துக் கொள்வது ?

பானுவிடம், தான் வீட்டுக்கு வரலாமா என்று கேட்ட போது, ''ஏன் வரக் கூடாது?'' என்று அவ்வளவு

நிதானமாகவும், அழுத்தமாகவும் அவள் கேட்டாளே, ஏன்? — தான் மனத்தில் ஏதேதோ கற்பித்துக் கொண்ட அசட்டுத்தனமான அவதிகளுக்கெல்லாம் அவள் பொறுப்பாளி அல்ல என்று கட்டிக்காட்டவா? அல்லது அவளுக்குத் தன் அம்மாவிடம் எந்தவிதமான பயமோ அல்லது மரியாதையோ இல்லை என்று விளக்குவதற்கா, எதற்காக அப்படிப் பேசினுன்? —

அவளுக்குத் தன் அம்மாவைக் கண்டால் பிடிக்கவில்லை என்று வெளிப்படையாகவே நேற்று கூறினுள். இதற்கு என்ன காரணம்? அப்பாவை விட்டு அம்மா வந்து விட்டாள் என்பதினுலா? அல்லது அம்மாவின் நடவடிக்கைகளும் இதற்குக் காரணமாக இருக்குமோ? — அவள் அம்மாவைப் பார்க்கும்போது ஒரு சந்தர்ப்பவாதியாகத்தான் தோன்றுகிறது. வாய்ப்புக்கள் ஏற்பட்டால் அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளத் தயங்கமாட்டாள் என்றுதான் தெரிகிறது....

பானுவின் அம்மாவுக்கும் நித்யாவின் அம்மாவுக்கும் என்ன வித்தியாசம்?

நித்யாவின் அம்மாவுக்குத் தனக்கும் நித்யாவுக்குமுள்ள சிநேகிதத்தைப் பற்றித் தெரியாமலில்லை. இருவரும் சேர்ந்து பல இடங்களுக்குச் சென்றபோதுகூட அவள் ஆட்சேபிக்கவில்லை. ஆனுல் நித்யா தன் தாய் அவர்களுடைய கல்யாணத்துக்குச் சம்மதிக்க மாட்டாள் என்று ஏன் சொன்னுள்? இதைப் பற்றி அவளுடைய தாயிடம் தான் விவாதிக்காமல், ஓர் உணர்ச்சி வேகத்தில் திலகத்தைச் சென்று மணந்தது, தான் செய்த தவருே? — ஒருவேளை நித்யாவே, தான் அவளுக்கேற்ற கணவன் இல்லை என்று நினைத்திருக்கலாம்; தாய்மீது பழியைப் போட்டு விட்டு விலகிக் கொண்டு விட்டாள்... அதோ, உறக்கத்தில் ஆழ்ந்து, காலையில் பார்த்த சினிமாவைக் கனவு கண்டு கொண்டிருக்கிருளே, அவள்தான் தனக்கேற்ற மனைவி... பானுவைப் பார்க்கப் போக வேண்டுமென்ற நினைவு அப்பொழுது வந்தபோது, அவன் மனத்தில் இலேசாக ஒரு நிழல் படர்வது போலிருந்தது... போலியோ அல்லது உண்மையோ பன்னிரண்டு வருஷ அமைதியைத் தன் 'ஈகோ'வைச் சீராட்ட வேண்டுமென்பதற்காக விற்றுத்தான் ஆகவேண்டுமா? வேண்டாம். பானுவுக்குப் போன் செய்து விடுவோம், வரவில்லையென்று...அட, கடவுளே! அவளுக்கு ஃபோன் ஏது?—

''மணி என்ன?''

பாதித் தூக்கத்தில் புரண்டு கொண்டே திலகம் கேட்டாள்.

''நாலு...''

''புறப்படலியா?''

''இதோ புறப்பட்டுக்கிட்டே யிருக்கேன்...'' அமிர்தம் கட்டிலை விட்டு இறங்கினுன்.

சோம்பல் முறித்துக் கொண்டே திலகம் எழுந்திருக்க முயன்றபோது, அமிர்தம் சொன்னுன்: ''நீ எழுந்திருக்க வேண்டாம். வெளியிலே காப்பி சாப்பிட்டுக்கிறேன்...''

''காப்பி போட எத்தனை நேரமாகப் போகுது?...'' என்று எழுந்திருந்தாள் திலகம்.

அமிர்தம் டிரஸ் செய்து கொண்டு புறப்படத் தயாராக இருந்தபோது, காப்பியைக் கொண்டு வந்து மேஜையில் வைத்தாள் திலகம்.

''ராத்திரி நேரமாகுமா?''

''சொல்ல முடியாது. சீக்கிரம் வரப் பார்க்கிறேன்.''

''காரை ஓட்டிக்கிட்டு வரணும்...டிரிங்க் பார்ட்டி...அளவுக்கு மீறிப் போகாதீங்க...''

அமிர்தம் சிரித்தான். ''நான் எப்போதாவது அளவுக்கு மீறிப் போயிருக்கேனு?''

''இதுவரையிலும் இல்லே'' என்று இழுத்தாள் திலகம்.



''நானே போக வேண்டாமோன்னு யோசிச்சுக்கிட்டிருக்கேன்'' என்று காப்பி சாப்பிட்ட பிறகு வாயைக் கைக் குட்டையினுல் துடைத்துக் கொண்டே சொன்னுன் அமிர்தம்.

''வரேன்னு சொல்லிட்டுப் போகாமல் இருந்தா நல்லா இருக்காதுன்னீங்க..''

அமிர்தம் 'வாஷ் பேஸி'னிடத்துச் சென்று வாயைக் கொப்புளித்தான். ஆள்காட்டி விரலினுல் பற்களை நன்ருகத் தேய்த்தான். திலகம் அவனேயே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இதென்ன புதுப் பழக்கம், காப்பி சாப்பிட்டப்புறம் வாயைக் கழுவிக்கிட்டு? எங்கே போகப் போறீங்க?''

''நீயும் வரயா, பானர்ஜி வீட்டுக்கு, சந்தேகம் தெளிஞ்சுடும்.''

''ஆமாம், அது ஒண்ணுதான் பாக்கி எனக்கு...வாயைக் கழுவிக்கிட்டுப் புறப்படற ஆயத்தத்துக்காகச் சொன்னேன். நீங்க நல்லா போயிட்டு வாங்க, சீக்கிரம் வந்துடுங்க...''

அமிர்தம் லட்சுமிபாய் நகர் சென்றதும், பானுவின் வீட்டு வாசலில் காரை நிறுத்தி 'ஹாரன்' அடித்தான். ஐந்து





இந்த வீடு நீந்துவதைப் பார்க்க வேண்டுமா? 32ம் பக்கத்தில் காண்க.

நிமிஷங்களாகியும் பானு வரவில்லை. திரும்பி விடலாமா? திரும்பிவிட்டால் எந்த விதமான பிரச்னையும் இல்லை. ஏதேனும் ஒரு முடிவுக்கு வரத்தான் இந்த அவகாசம் தனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

திரும்பிச் சென்றால், திலகத்தை அழைத்துக் கொண்டு போய், நேரு பார்க்கில் அவளுக்குக் கார் விடக் கற்றுக் கொடுக்கலாம். அவளும் மிஸஸ் ஐயரை நேருக்கு நேர் பார்த்து, 'எங்க வீட்டுக்காரரும் எனக்குக் கார் விடக் கற்றுக் கொடுத்தார்' என்பாள். தான் 'ரிடையரா'கிப் 'பென்ஷன்' வாங்கும் போது தனக்குக் களைப்பு ஏற்பட்டால் திலகம் கார் ஓட்டிக் கொண்டு போகலாம்... என்ன சலனமற்ற வாழ்க்கை! அமைதி... சமாதியின் அமைதி!...

அமிர்தம் மறுபடியும் 'ஹார்ன்' செய்தான். பானுவின் அம்மாவுக்கு உடல் நலம் சரியில்லையோ? — அவன் காரைப் பூட்டிக்கொண்டு புறப்பட்டான்.

பானுவின் வீட்டு வாசற்கதவு சாத்தியிருந்தது. உள்ளே போவதா, வேண்டாமா?....

''ஹல்லோ!''

அவன் திரும்பிப் பார்த்தான். நடேசன். இவர் சம்பந்தப்படாத தென்னிந்திய சங்கங்கள் ஒன்றும் இல்லை. ஒன்றில் காரியதரிசி, மற்றொன்றில் துணைக் காரியதரிசி, இன்னொன்றில் நிர்வாகக் குழு உறுப்பினர். வேதாந்த தேசிகன் வைபவமாக இருந்தாலும் சரி, வள்ளலார் தைப்பூசமாக இருந்தாலும் சரி, எல்லாவற்றிலும் கலந்துகொண்டு பம்பரமாக வேலை செய்வார்.

''எங்கே இந்தப் பக்கம்?'' என்று கேட்டார் நடேசன்.

''நீங்க இங்கேயா இருக்கீங்க?''

''ஆமாம். 'இ' பிளாக். வாங்களேன்!''

''இப்போவா?''

''இங்கே யாரையானும் பார்க்கணும்னு, பார்த்துட்டு வாங்க...யாரைப் பார்க்கணும்?''

''உங்க வீடு பக்கந்தானு?''

''இதோ இந்தப் பக்கம் திரும்பினுல் நாலாவது வீடு.''

''அப்போ உங்க வீட்டுக்குப் போகலாம், வாங்க...''

''தாராளமா... நீங்க தேடிண்டு வந்த மனுஷா இல்லையோ?''

''அஞ்சேகால்தான் ஆவுது, என்ன வெய்யில்...!'' என்றான் அமிர்தம்.

''ஆமாம். அசாத்திய வெய்யில்... இந்த வெய்யிலில் யாரைத் தேடிண்டு வந்தேள்?''

''அதோ வாசல்லே இரண்டு மூணு குழந்தைங்க விளையாடிக்கிட்டிருக்கே, அந்த வீடா?''

''ஆமாம்...''

''சுறுசுறுப்புள்ள குழந்தைகள்! எல்லாம் உங்க குழந்தைங்கதானே?''

''இல்லே, இல்லே. அதோ அழுதுண்டிருக்கே, அதுதான் என் குழந்தை... அதை இப்படிப் புல் தரையிலே விட்டுட்டு, அவ உள்ளே என்ன பண்ணறு?''

தம்மைத் தாமே கேட்டுக் கொண்டு அவர் குழந்தையைத் தூக்கியவாறு வீட்டில் நுழைந்தார். ''மீனுட்சி... மீனுட்சி...!''

''என்ன குடிமுழுகிப் போச்சு, எதுக்காகக் கத்திண்டே வரேள்...?''

இவ்வாறு கேட்டுக் கொண்டே வந்த அவர் மனைவி, அமிர்தத்தைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றாள்.

''குழந்தை ஏன் வெளியிலே நிண்ணுண்டு அழறுன்?''

''அவனுக்கு என்ன வேலே?''

அவள் முகத்தில் இப்பொழுது செயற்கையான புன்னகை.

''இவர்தான் மிஸ்டர் அமிர்தம்... டெபுடி செகரடரி, ஹெல்த் மினிஸ்டிரி.''

அவன் அப்பதவி வகிப்பதில் தனக்கு ஆட்சேபணை இல்லை என்பது போல் அவர் மனைவி தலையை ஆட்டினாள்.

''இப்படி உட்காருங்கோ..'' என்று எலும்புக் கூடாய் இருந்த ஒரு நாற்காலியை அவர் சுட்டிக் காட்டினார்.

இவ்வளவு வெளி விவகாரங்களில் ஈடுபடுபவர், தம் வீட்டையும் கொஞ்சம் கவனித்துக் கொள்ளக் கூடாதோ? உட்காருவதற்கு ஒரு நல்ல மோடாவாவது வாங்கிப் போட்டிருக்கலாம்.

''காப்பி கொண்டா, போ'' என்றார் அவர் தம் மனைவியைப் பார்த்து.

''நோ ப்ளீஸ்...இப்போ வேண்டாம். உங்க வீட்டைப் பார்த்துக்கிட்டேன். இன்னொரு நாளைக்கு வரேன்...''

''என்ன இப்படி வந்துட்டு, சாப்பிடாமே போறீங்க...''

''பரவாயில்லே, இன்னொரு நாளைக்குக் கட்டாயமா வரேன்...''

''காப்பி ஒரு நிமிஷத்திலே கொண்டு வரேன்...'' என்றாள் அவர் மனைவி.

''இதோ பாரு, கொண்டா நீ... அவர் சாப்பிட்டு விட்டுப் போவார்.'' ஒரு 'டெபுடி செகரடரியை'க் காப்பி சாப்பிடாமல் அனுப்புவதில்லை என்று அவர் தீவிரமாக இருந்தார்.

நேற்றே போட்டு வைத்த 'டிகாக்ஷன்' போலும்! அமிர்தம் கஷ்டப்பட்டுக் காப்பியைக் குடித்தான்.

சே...' இதென்ன பைத்தியக்காரத்தனம்!... மனைவியிடம் பொய் சொல்லி விட்டுக் கிளம்பி, யாரையோ பார்க்க வந்து, பிறகு அதிகமாகப் பழக்கமில்லாத ஒருவர் வீட்டில், அவர் மனைவி தயாரித்த மிகவும் மோசமான காப்பியைச் சாப்பிட்டுக் கொண்டிருப்பானேன்? — தான் ஒரு கோழை... பானுவின் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டத் தயங்கியதற்குப் பரிசு, இந்த மோசமான காப்பி...

''சரி, வரட்டுமா?''

அவன் திடுதிப்பென்று எழுந்திருந்தது நடேசனுக்குச் சற்று ஆச்சரியத்தை அளித்தது.

''இங்கே யாரைப் பார்க்கணுங்கிறது ஞாபகத்துக்கு வந்துடுத்தா?''

மனுஷன் விடமாட்டார் போலிருக்கிறது!... மற்றவர்கள் விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதில் என்ன ஆர்வம்!

''வரட்டுமா?....இன்னொரு நாளைக்கு வரேன்...'' அவர் பதிலுக்குக் கூடக் காத்திராமல் அவன் வேகமாகச் சென்றான்.

**பா**னுவின் வீட்டுக்குச் சென்று 'காலிங் பெல்'லை அழுத்தினான்.

ஜன்னல் கதவு சாத்தியிருப்பதைக் கண்டதும் அவனுக்குச் சந்தேகம் வந்தது. வாசற் கதவைப் பார்த்தான்.

பூட்டியிருந்தது!

தான் முதலில் வந்தபோது பூட்டியிருக்கவில்லையே! ஒருவேளை தான் கவனிக்கவில்லையோ?...இல்லை,நிச்சயமாகப் பூட்டியிருக்கவில்லை.... அப்படியானால் தான் நடேசன் வீட்டுக்குப் போய் வருவதற்குள் பூட்டிக் கொண்டு சென்றிருக்க வேண்டும்! அவர்கள் எங்கே போயிருப்பார்கள்?......அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

காரை நோக்கிச் சென்றான்....

காரில் போய் உட்கார்ந்ததும் அமிர்தம் யோசித்தான். எங்கே போவது? வீட்டுக்கா? அர்த்தமில்லை.

தான் அவள் வீட்டு வாசலில் நின்றபோது பானு பார்க்காமலா இருந்திருப்பாள்? அப்படிப் பார்த்தும் அவள் வீட்டைப் பூட்டிக் கொண்டு போனாள் என்றால்... சே... தான் வந்திருக்கக் கூடாது....

திலகத்திடம் சொல்லி விட்டு வந்த மாதிரி பானர்ஜியைப் பார்க்கப் போகலாமா? அவன் வீட்டில் இருப்பானோ? முப்பத்தைந்து வயதாகியும் கல்யா



''நேற்று இரவு நான் கண்ட கனவில் பாரதநாட்டின் பெருமை ஒரேயடியாக உயர்ந்து விட்டது!''

''அப்படியா? என்ன கனவு கண்டீர்கள்?''

''அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்து பல மந்திரிகள் நம் நாட்டுக்கு வந்து, பொருளாதாரத்தைச் சீர்குலைப்பது எப்படி? லஞ்சம் வாங்குவது எப்படி? கட்சிக்குள்ளேயே நல்லவர்களைக் கவிழ்ப்பது எப்படி? பாடப் புத்தகத்தில் அரசியலைக் கலப்பது எப்படி? பிறந்த நாள் விழா கொண்டாடிக் கொள்வது எப்படி? அராஜகத்தை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருப்பது எப்படி? - என்பன போன்ற விஷயங்களைக் கற்றுக்கொண்டு போவது போல் கனவு கண்டேன்!''



நீரிலும் சாலையிலும் செல்லக்கூடிய புதுமையான 'டிரெய்லர்' ஒன்றை மேற்கு ஜெர்மன் நிபுணர்கள் உருவாக்கியுள்ளனர். காரின் பின்புறம் இணைத்துக் கொள்ளக்கூடிய இந்த 'டிரெய்லர்' பிளாஸ்டிக்கினால் செய்யப்பட்டது. இரண்டே சக்கரங்கள் கொண்டது; இது மிகவும் இலேசாக இருப்பதால், நீரிலும் மிதக்கும், மூழ்காது; குடை சாயவும் சாயாது. இந்தக் குட்டி வீட்டுக்குள் (டிரெய்லர்) குளிர் சாதனப் பெட்டி, அடுப்பு ஆகியவற்றை அமைத்துக் கொள்ளலாம். நீரிலும் நிலத்திலும் செல்லக்கூடிய "ஆம்பிகார்" எனப்படும் இம் மோட்டார் வாகனத்தின் விலை 17,430 ரூபாய்!

- (யூ. பி. எஸ்.)

ணம் செய்து கொள்ளாத புத்திசாலி. பெண்களைக் கண்டால் அவனுக்கு அசாத்திய வெறுப்பு. இதற்கு மிகவும் அந்தரங்கமான காரணம் இருக்க வேண்டும்....

அவனைப் போய்ப் பார்ப்பதில் ஆபத்தும் இருக்கிறது. ஸ்காண்டிநேவியன் நாடோடிப் பாடல்களைப் பற்றி அவன் சொல்வதையெல்லாம் கேட்டுத் தொலைக்க வேண்டும். பானுவை வீடு தேடி வந்த தன்னுடைய முட்டாள் தனத்துக்கு இதுதான் தண்டனை.

அவன் காரை சரோஜினி நகர் வழியே விட்டுக் கொண்டு சென்றான். ரிங் ரோடில், பல மாடிகளைக் கொண்ட அரசாங்க விடுதியில் பானர்ஜி இருந்தான். 'பிரும்மச்சாரி, இவனுக்கு இவ்வளவு பெரிய இடம் எதற்கு?' — ஒவ்வொரு தடவையும் அவன் வீட்டுக்குப் போகும்போது தனக்கு இந்த நினைவு வருகிறது. தன் அடி மனத்தில் அவனிடத்துப் பொறாமை ஏற்பட்டு அதுவே இதற்குக் காரணமாக இருக்கலாமோ!

பொறாமை ஏற்படக் காரணம் என்ன? சமூக பந்தங்களினின்று தப்பித்துக் கொண்டு, சுதந்திரமாக அவ்வளவு பெரிய வீட்டில் அவன் தன் இச்சைப்படி வாழ்கிறான். 'இது ஆண்கள் உலகம், பெண் ஒரு தேவையல்லாத குறுக்கீடு' - இதுதான் அவனுடைய வாதம். இதற்காக அவனை ஒரு துறவி என்றும் அழைக்க முடியாது. "நான் எதையும் துறந்து விடவில்லை. ஆனால் தேர்ந்தெடுக்கும் உரிமையை என்னிடத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று அவன் ஒரு சமயத்தில் சொன்னது அமிர்தத்தின் நினைவுக்கு வந்தது.

பானர்ஜி ஒரு மிகச் சிறந்த ஓவியன். மற்றவர்கள் பார்த்துப் பாராட்டவேண்டும் என்பதற்கோ அல்லது 'எக்ஸிபிஷன்' நடத்திப் படங்களை விற்றுப் பொருள் சம்பாதிக்க வேண்டும் என்பதற்கோ அவன் சித்திரம் வரைவதில்லை. 'இந்தப் படம் அற்புதமாக இருக்கிறது' என்று சொன்னால், அவன் வெறுமனே தலையை ஆட்டிவிட்டு வேறு எதைப்பற்றியாவது பேசுவான்.

ஓவியம் என்றதும் பானுவின் நினைவு வருகிறது. பானுவின் படங்கள் சராசரி தரத்துக்குச் சற்று அதிகமானது என்பதில் சந்தேகமில்லை. அவளைப் பானர்ஜியின் படங்களைப் பார்க்க ஒரு நாள் அழைத்து வரவேண்டும்...

அட கடவுளே! நான் எவ்வளவு பெரிய முட்டாள்! பானுதான் தன்னை வரச் சொல்லிவிட்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு போய்விட்டாளே!—

பானர்ஜி வீட்டில் இல்லாவிட்டால் என்ன செய்வது? கனாட் ப்ளேஸ் போய் ஏதாவது சினிமாப் பார்க்கலாம். இன்று ஞாயிற்றுக் கிழமை. ஒரு தியேட்டரிலாவது டிக்கெட் கிடைக்காது. மறுபடியும் லட்சுமிபாய் நகர் போய்ப் பார்த்தால் என்ன? — பானு பக்கத்தில் எங்கேயாவது போயிருக்கலாம்... தான் இவ்வளவு அவசரப்பட்டு வந்திருக்கக் கூடாது. நித்யா ஒரு தடவை சொன்னது போல், தான் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்து ஒரு வேகத்தில் காரியங்களைச் செய்பவன்தான். நித்யா எப்பொழுதுமே தன் கோபத்துக்கு மதிப்புத் தருவதில்லை. ஒரு சமயம் அவள் இன்னும் சில ஆபீஸ் நண்பர்களுடன் சோனாவுக்குச் செல்ல இருந்தபோது அவனைக் கூப்பிட்டாள். அவள் ஆபீஸ் நண்பர்களுடன் போவது அவனுக்குப் பிடிக்கவில்லை.

"இன்னொரு சமயம் போகலாமே, நாம இரண்டு பேரும்..." என்றான்.

"ஏன், இப்போ போனா என்ன?"

"உன் ஆபீஸ் நண்பர்களோட போகணுமென்னு பார்க்கிறேன்."

"நீங்க பார்த்துண்டே இருங்கோ. நான் போகலாம்னு இருக்கேன்."

"பேஷா. தாராளமா, சந்தோஷமா போயிட்டு வா!" என்று அவன் கோபத்துடன் சொன்னான். (தொடரும்)

செப்டம்பர் 9ந் தேதி 'கல்கி' அவர்கள் பிறந்த தினம். 25-8-70ல் ரசிகமணி டி. கே. சி. நினைவு விழா குற்றாலத்தில் நடைபெறவிருக்கிறது. இந்த இரு பெரியார்களுக்கும் அஞ்சலி செலுத்தும் விதமாக 'கல்கி' அவர்களின் 'மகுடபதி' என்ற நாவலுக்கு ரசிகமணி டி.கே.சி. எழுதிய முகவுரையை இங்கு பிரசுரிக்கிறோம்.

'கல்கி'யின் சிறப்பை எடுத்துக் காட்டுவது மட்டுமல்ல இந்த முகவுரை. இலக்கியம் என்பதற்கு இலக்கணம் வகுத்துத் தருகிறது. ரசிகமணியைத் தவிர வேறு யாரால் இத்தனை தெளிவாகவும் சுருக்கமாகவும் அந்த இலக்கணத்தை எடுத்து இயம்ப முடியும்?

# தமிழ் இலக்கியப் பயிர்

## டி. கே. சிதம்பரநாத முதலியார்

"கல்கி" ஆசிரியருக்குச் சொந்த ஊர் மாயவரம் பக்கத்திலுள்ள கிராமம். நானும் அங்கே போய்த்தான் இருக்கிறேன். "மகுடபதி"யை வாசித்த பிறகு, ஆசிரியர் பிறந்து வளர்ந்து சுகதுக்கங்களை அனுபவித்த இடம் கோயமுத்தூர் ஜில்லாதான் என்று சொல்லத் தோன்றுகிறது.

* * *

ஆசிரியர் ஏதோ சொற்ப காலந்தான் கவுண்டர்கள் நாடாகிய கொங்கு நாட்டில் வாழ்ந்திருக்கிறார். ஆனாலும், அங்குள்ள மக்களோடு இதயம் கலந்தவராக வாழ்ந்திருக்கிறார். மக்களோடு மாத்திரமல்ல; கொங்கு நாட்டு நிலத்திலும் புழுதியாடத் திளைத்திருக்கிறார்.

இந்த அபூர்வமான இதயப் பண்பு காரணமாக, கதையில் வரும் பாத்திரங்களும், மரங்களும் செடிகளும் வீடுகளும் கொங்கு நாட்டு மண்ணிலிருந்தே முளைத்துச் செழித்து வளர்கின்றன.

எந்த விதத்திலும் பாத்திரங்களையும் களங்களையும் கொங்கு நாட்டை விட்டுப் பெயர்த்து எடுக்க முடியாது. வேறொரு ஜில்லாவில் நட்டு வைக்க முயன்றால் பயன் இராது.

உண்மையான இலக்கியத்துக்கு இதுதான் லக்ஷணம்.

தாமஸ் ஹார்டி என்ற பேர் பெற்ற நாவலாசிரியர் டஜன் கணக்கில் நாவல்கள் எழுதியிருக்கிறார். எல்லாவற்றுக்கும் களம் இங்கிலாந்திலுள்ள ஒரு ஜில்லாதான். அகல உழவில்லை அவர், ஆழ உழுதார். நல்ல பேணி கண்டது.



கம்பரும் இந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்தான். இமயமலையையும் போய்த் தொட்டுவிட்டு வந்தவர் கம்பர். ஆனாலும் அவருக்குக் களம் தமிழ்நாடுதான். பாத்திரங்களும் தமிழர்களே.

நம்முடைய 'கல்கி' ஆசிரியர் வட நாடெல்லாம் சுற்றித் திரிந்தவர். பம்பாய், பஞ்சாப், வங்காளம் எல்லாம் அவருக்குத் தெரியும். அங்குள்ள மக்களையும் இப்பேர்ப்பட்டவர்கள் என்று தெரியும். ஆனால் உணர்ச்சியோடு ஒட்டுவது தமிழ் நாட்டு மண்தான். அதிலிருந்துதான் உண்மையான தமிழ் இலக்கியப் பயிர் உண்டாகக் கூடும். அற்புதமான நல்ல பயிரும் உண்டாகியிருக்கிறது.

சம்பவங்கள் கோயமுத்தூர் நகரத்திலிருந்து ஆரம்பிக்கின்றன. ஆனாலும் நாட்டுப்புறத்திலும் பட்டிக்காடுகளிலும் நீலகிரிப் பிரதேசங்களிலும் முக்கியமான நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. இந்தக் களங்களோடு சம்பவங்கள் ஒட்டிக் கொள்கின்றன.

பல சந்தர்ப்பங்களில் கோரமான சம்பவங்கள் நேர்ந்துவிடப் பார்க்கின்றன. பரிதாப நிலையில்

இருக்கும் பாத்திரங்களுக்கு மாத்திரமே யல்லாமல் நமக்குமே இதயத் துடிப்பு அப்படியே நின்றுவிடுமோ என்பதாக இருக்கும். ஆனாலும் இதயத்துக்கு ஹிதமும் இளக்கமும் ஏற்படும்படியாக, நிவர்த்தி சம்பவங்கள் வந்து கூடிவிடும்; பாத்திரங்களுக்கும் நமக்கும் மன எழுச்சி உண்டாய் விடும். படுத்துக் கொண்டு படிக்க நேர்ந்தால் அப்படிப் படிக்கிறதை விட்டுவிட்டு, உட்கார்ந்தே படிக்கத் தூண்டிவிடும்.

* * *

எதிர்பாராத சம்பவங்களாய் இருக்கின்றனவே எல்லாம், என்று நினைக்கத் தோன்றும்.

எதிர்பார்க்கின்ற சம்பவங்களே கதையில் நிகழ்கின்றன என்றால்புஸ்தகத்தை அப்படியே மூடிவைத்துவிட வேண்டியதுதானே. காலை ஆறு மணிக்கு சூரியன் உதித்தது. ஆறு மணி நேரம் கழிந்ததோ இல்லையோ உச்சிக்குப் போய்விட்டது. இன்னும் ஆறு மணி நேரம் கழித்துப் பாருங்கள். அடடா, மேல்த்திசையில் அப்படியே விழுந்துவிட்டது. இது எதிர்பார்க்கிற காரியந்தானே?

அதே மாதிரி ஓர் அநாதைப் பெண்ணை ஏகாந்தமான இடத்தில் சிறை வைத்தாய் விட்டது. அவளுடைய கதி நிர்க்கதி. சிறை வைத்தவனோ கொடுமை செய்து காரியத்தைச் சாதிப்பதில் ராவணனையே முதுகுக்கு மண் காட்டி விடுவான். தப்பிக்கும் வழி இராது. கொடுமைக்கு அநாதைப் பெண் உள்ளாகிவிடவேண்டியதுதான். ராவணனுக்கும் காரியம் சித்தியாய்விட வேண்டும். இப்படியெல்லாம் இருந்தால்தான், கதையை நான் ரஸிப்பேன் என்று இலக்கிய ரஸிகர்கள் சொல்லலாம். அவர்களது இலக்கண விதிப்படி கதை எழுதியிருந்தால், அந்தக் கதையை வாசிப்பதற்குக் கூலி ஆள் தேட வேண்டியது தான்.

உண்மை என்னவென்றாலோ எதிர்பாராத சம்பவங்கள் நம் வாழ்க்கையில் அடிக்கடி நடந்து கொண்டேயிருக்கின்றன. அவைகளை லக்ஷியம் செய்யாமல் அப்படியே நாம் மறந்து விடுகிறோம். மறந்து போகாதபடி ஒரு டைரியில் குறித்து வைப்போமானால் விசித்திரமாயிருக்கும். முடிவில் நண்பர் யாரிடமாவது டைரியைக் கொடுப்போமானால், அதைப் பார்த்துவிட்டு, ''இப்படியெல்லாமா நடந்திருக்கும்?'' என்று ஆச்சரியப்படுவார்.

''கல்கி'' தமிழுக்கு நல்ல சேவை செய்கிறார் என்று எல்லாரும் சொல்கிறார்கள். மகுடபதியை வாசித்ததும் என்ன தோன்றுகிறது என்றால், தமிழ்தான் அவருக்குச் சேவை செய்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது. நம்முடைய கண்ணுக்குத் தோன்றக்கூடிய காட்சிகள் அனுபவிக்கக் கூடிய காட்சிகள் எல்லாம் தெள்ளத் தெளிந்த தமிழ் மூலமாக நம்முன் வந்து நிற்கின்றன. சாமான்யமாகத் தெருவில், திண்ணையில், அடுக்களையில் வழங்கும் சொல்லுக்கு என்னென்ன சக்தி யெல்லாமிருக்கிறது என்று வியக்கத் தோன்றுகிறது. மனதில் நிகழும் அபூர்வமான நிகழ்ச்சிகளைப் பளிங்குக் கூட்டில் வைத்துக் காட்டிய மாதிரி காட்டுகிறது ஆசிரியரது தமிழ்.

தமிழருக்கு நல்ல விருந்து மகுடபதி.

# உறவு



கள்ளன் உடுபிக் குள்ளன் அந்த
வெள்ளைப் பார்வை யுள்ளே
கொள்ளை தர்தேன் எல்லாம்! — எந்தன்
உள் ளமர்ந்து விட்டான்!

நந்த கோபன் பாலன் — இந்த
நானி லத்தின் நாதன்,
முந்தைத் தொர்தம் ஏதோ — எனை
மொத்த மாகக் கொண்டான்!

*சாளரத்தின் ஊடே — எந்தன்
சகலமும்க வர்ந்தான்!
ஆளுகின்றான் ஐயன் — மீளா
அடிமையாகக் கொண்டான்!

உறவே ஆவான் என்றும் — எங்கள்
உடுபி பால கிருஷ்ணன்
பிறவி பிறவி தொடரும் — இந்த
உறவு பெரிய உறவே!

—தம்பி சீனிவாசன்

*உடுப்பிக் கண்ணனை 'நவக்கிரக சாளரம்' வழிதான் தரிசிக்கலாம்.

# சிதம்பர ரகசியம்

கதை : கோமதி சுவாமிநாதன்
சித்திரம் : ராஜு

4
















அதைச் சீக்கிரமா செய்யப் படாது?
அவரோட உறவினர் 'லிஸ்ட்'லே எத்தனை பேர் இன்னும் பாக்கி இருக்காங்களோ? ஹும்!
இரண்டு அல்லது மூன்றே போதுமே! மேலே மேலே வந்துக்கிட்டே இருந்தா எப்படி? நம்ம பங்குக்குச் சேர வேண்டிய சொத்தின் மதிப்பு நாளுக்கு நாள் குறைஞ்சுக்கிட்டே போகுதே!


அண்ணே! இப்படி வெள்ளிப் பாத்திரங்களையெல்லாம் சாதாரண உபயோகத்துக்கு வாங்கிப் போட்டிருக்காரே எஜமான்? யாராவது தூக்கிக் கிட்டு ஓடிட்டால்?
பட்டப்பா! பட்டு பட்டுன்னு டப்பா அடிற மாதிரி கேள்வி போடறயேப்பா!


அப்படி திருடறவன் என்ன அப்போலோவிலே ஏறிக் கிட்டு அம்புலிக்கா போயிடுவான்?
அரசாங்க பஸ் ஏறி அச்சர பாக்கம் போறதுக் குள்ளே மாட்டிக் குவான்!


அச்சரபாக்கமும் போலாம், அம்புலிக்கு வேணுமானாலும் போகலாம் ஆனால் ஒரே ஒரு இடத்துக்கு மட்டும் யாருமே போகக் கூடாது. இந்த வீட்டு மாடியிலே இருக்கிற கடைசி அறைக்கு மட்டும் நெருங்கவே போகக் கூடாது. எஜமான் உத்தரவு அப்படி. பூட்டித்தான் இருக்கும்!


அன்று மாலை... தனிமையில் இருவர்.
இந்த வீட்டிலே எத்தனையோ படம் இருக்கு. ஆனால் பெரியப்பா படம் ஒண்ணு கூடக் காணோமே?
ஒரு வேளை பார்க்கச் சகிக்க மாட்டாரோ என்னவோ? ஹும்! நாமெல்லாம் அவரைப் பார்க்கவா காத்துக் கிட்டிருக்கோம்? அவர் பணத்தைத் தானே பார்க்கணும்?


பொழுது போக்காகத் தோட்டத்துக்கு வந்த மோகன் ராதாமணியைப் பார்க்கிறான்.
இந்த மாமா எப்படி இருப்பாருன்னு ஊகிக்கவே முடியலையே? அம்மா வந்துத் தெரிஞ்சிக்கணும். ஆனா அவதான் காலமாகி ரொம்ப நாளாச்சே!


என்ன யோசனை ரொம்ப பலமாயிருக்கே?
அத்தான் என்று கூப்பிடக் கூடாதா? எனக்கு இப்படி ஓர் அழகான மாமன் மகள் இருக்கிறாள் என்று தெரிந்ததும் எத்தனை மகிழ்ச்சி அடைந்தேன் தெரியுமா?
இந்தத் திடீர் திருப்பம் மோகனைத் திகைக்க வைக்கிறது.
தொடரும்

# அருமையான சுவை என்பது
## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு



# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குதான் எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன— புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




எனவே

**பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகள்**

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குவதில் வியப்பில்லை

everest/900j/PP tm

## 4. சொல்ல முடியாத ஒன்று!

வேதமூர்த்தியின் சொற்பொழிவு ஒரு மணி நேரத்துக்குப் பிறகு ஓய்ந்தது. ஒரு சிறந்த நடிகன் நடிக்கும் உணர்ச்சி வாய்ந்த ஒரு சினிமாப் படத்தைக் கண்கொட்டாமல் பார்த்துவிட்டுப் பெருமூச்சுடன் எழுந்திருப்பவர்களைப் போல் மக்கள் மைதானத்தின் தரையிலிருந்து எழுந்தார்கள்.

சிவராமனின் பேச்சுக்கும் வேதமூர்த்தியின் பேச்சுக்கும் எவ்வளவு வித்தியாசம்! வேதமூர்த்தியின் பேச்சு வாண வேடிக்கையைப் போல் பூப்பொறிகளைச் சொரிந்து மயக்கியது. அணுகுண்டைப் போல் அதிர்ந்து உள்ளெலும்பை எல்லாம் அதிர வைத்தது. எல்லாத் திசைகளிலும் ஜோதி மயமான பொறிகள் தெறித்து விழுந்து பரவசப்படுத்தின. ஆனால் சிவராமனுடைய பேச்சு, மத்தாப்பு மாதிரி அடக்கமாக ஜொலித்தது. பல வர்ண ஒளியை வீசினாலும், அதில் குளுமை இருந்தது.

சாரதாவும், முரளியும் பஸ் நிற்கும் இடத்தை நோக்கி நடந்தார்கள்.

''பேச்சு எப்படி...?'' என்று சாரதா கேட்டாள்.

''பேச்சில் அலங்காரம் இருந்தது'' என்றான் முரளி அசிரத்தையுடன்.

''உம்... அது மட்டுந்தானா...?''

''அவ்வளவுதான்.''

''என்ன....?''

''ஆமாம்...உனக்கு அது எங்கே புரியப் போகிறது. பேச்சின் அலங்காரத்திலும், ஆரவாரத்திலும் மயங்கியிருந்தாய். சிந்திக்கச் சக்தி ஏது...? இப்படி இந்தப் பேச்சை வைத்துக் கொண்டுதான் இவர்கள் எல்லாரும் அரசியலில் விளையாடுகிறார்கள்.''

''என்ன தவற்றைக் கண்டுவிட்டீர்கள்?''

''சொன்ன புள்ளி விவரங்கள் எதுவுமே சரியில்லை. அதையெல்லாம் யார் சோதித்துப் பார்க்கப் போகிறார்கள் என்ற தைரியத்தில் துணிந்து பேசுகிறார்கள். சொற்களைக் கொண்டு அழகாகக் கோலம் போடத் தெரிந்திருக்கிறார்கள்.''

''உங்களைப் போன்றவர்களுக்காக அவர்கள் பேச வரவில்லை.''

''தெரிந்ததுதானே, இன்று சொற்பொழிவுகளில் மயங்குபவர்கள், பாட்டாளிகளும், மாணவர்களுந்தான்..... அவர்களுடைய கூட்டம்தான் அங்கு நிறைந்திருந்தது. பாட்டாளியும் சிந்திப்பதில்லை, மாணவர்களும் சிந்திப்பதில்லை. சிந்திக்க விடாமல் பாட்டாளியைத் தடுப்பது, முதலாளிகள் மீதுள்ள பொறாமை. மாணவர்களைத் தடுப்பது, அவர்களுடைய வயது.''

''உங்களுக்குப் பொதுவுடைமைக் கட்சி என்றாலே அலெர்ஜி'' என்றாள் சாரதா வெடுக்கென்று.

# போராட்டங்கள்

### ர. சு. நல்லபெருமாள்



தூரத்தில் பஸ் வருவது தெரியவே, இருவரும் விரைவாக நடந்தார்கள். பஸ்ஸில் செல்லும்போது சாரதாவின் மனத்தில் சிவராமன் பேசிய காட்சி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. மேடையில் அவன் நின்ற காட்சியும், பேசிய பாணியும் நினைக்க நினைக்க இனிய உணர்வை அள்ளி அங்கமெல்லாம் தெளித்துக் கொண்டிருந்தன. வேத மூர்த்தி சொன்னது, நினைவில் திடீரென்று மோதியது —

''இவர் உள்ளத்தைக் கவர்ந்தது கல்லூரியும் அல்ல, வனிதையரின் காதலும் அல்ல....''

உள்ளத்தைக் கவர்ந்தது கட்சியாமே கட்சி. பெரிய கட்சி... சேச்சே! சுத்த பைத்தியக்காரத்தனம். கட்சியில் இருப்பவர்கள் எல்லாரும் இவரைப் போலத்தான் சந்நியாசி மாதிரி இருக்கிறார்களோ... கர்வம் பிடித்தவர்....

பஸ் நின்றது. சாரதா சிந்தனையிலிருந்து விடுபட்டு எழுந்து கீழே இறங்கினாள். இருவரும் ஒன்றும் பேசாமலேயே நடந்து சென்றனர். தெரு விளக்குகள் அழுது வடிந்தன.

இருவரும் வீட்டை அடைந்ததும் சமையல்காரன்தான் வரவேற்றான்.

''முத்து! அப்பா எங்கே? பத்து மணிக்குள்ளாகவா தூங்கி விட்டார்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வராந்தாப் படிகளில் ஏறினாள் சாரதா.

''அவங்க வெளியிலே போயிருக்கிறாங்க'' என்றான் முத்து. சாரதா ஒரு கணம் திகைத்துப் போய் நின்றாள்.

''தெப்பக் குளம் பக்கத்திலிருந்து வருவார்களே, ஓர் அம்மா...அவர்கள் தான்.... உயரமாக, கலகலவென்று பேசுவார்களே.... பியட் காரில் வருவார்களே....'' என்று அடையாளம் சொன்னான் முத்து.

''ஓ.... ஜானகி அம்மாளா?''

''ஆமாம், அவர்களேதான். வந்து ஐயாவைக் காரிலே அழைத்துக்கொண்டு போனார்கள்'' என்று கூறி விட்டு வேறு புறமாய்த் திரும்பிச் சிரித்துக் கொண்டான் முத்து. ஆனால் தான் சிரிப்பது அவளுக்கும் தெரிய வேண்டும் என்பது போல் நடந்து கொண்டான்.

சாரதாவின் முகம் கறுத்தது. ஓரக் கண்ணால் முரளியைக் கவனித்தாள். அவன் எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் நின்று கொண்டிருந்தான். சாரதா, ஏதோ தனக்குள்ளே முனகிக் கொண்டாள். பிறகு சமையல்காரனைப் பார்த்து, ''எங்களுக்குச் சாப்பாட்டை இங்கேயே கொண்டுவா'' என்று கூறி விட்டுச் சோபாவில் பொத்தென்று விழுந்தாள்.

''ஏன்...? நான் வீட்டுக்குப் போக வேண்டாமா? எனக்குப் பதினொரு மணி வரை பஸ் கிடைக்கும். வீட்டில் போய்ச் சாப்பிட்டுக் கொள்வேன்'' என்றான் முரளி.

''தயவுசெய்து இன்று இங்கே தங்குங்களேன்.... அப்பா வந்த பிறகு வேண்டுமானால் போங்கள்.''—சாரதாவின் குரல் கெஞ்சியது. மறுக்க முடியாமல் அவளுடைய வேண்டுகோளுக்கு இசைந்தான் முரளி.

''அப்பா வரும் வரை இங்கேயே இருப்போம்'' என்றாள் சாரதா.

''நீ ஏன் விழித்திருக்கிறாய்? சாப்பிட்டு விட்டுத் தூங்கப் போ. நான் இருக்கிறேன்'' என்றான் முரளி.

''ஊஹூம். அவர்கள் வரும்வரைக்கும் நானும் விழித்திருக்கத்தான் போகிறேன்.''

''ஒருவரும் விழித்திருக்க வேண்டாம். நீ தூங்கப் போ. நான் இந்த



அறையில் தூங்குகிறேன். அவருக்காகக் காத்திருப்பானேன்? எப்போது வரப்போகிறாரோ...?''

''நீங்கள் வேண்டுமானால் தூங்கப் போங்கள். நான் விழித்திருக்கப் போகிறேன்'' என்றாள் பிடிவாதமாக. அவள் குரலில் சிறிது கோபமும் தொனித்தது. உள்ளுக்குள்ளே எதையோ நினைத்துப் பொருமுகிறாள் என்பதை அவள் முகம் தெளிவாகக் காட்டி விட்டது.

முரளி, பேசாமல் ஒரு சோபாவில் சாய்ந்தான். அடிக்கடி ஓரக்கண்ணால் அவள் முகத்தைப் பார்த்தான்.

முத்து சாப்பாட்டை வராந்தா மேஜையின் மீதே பரிமாறினான். சாப்பிடும்போது சாரதாவைக் கவனித்தான் முரளி. மிகுந்த மன வேதனைக்கு அவள் ஆளாகியிருப்பதை அறிந்து அவனும் உற்சாகம் இழந்திருந்தான்.

''இப்படித்தான் திடீர் திடீரென்று அப்பா கிளம்பி விடுவார். பொதுக் கூட்டத்துக்கு வரச் சொல்லி நான் கூப்பிட்டபோது மறுத்து விட்டார்'' என்றாள் சாரதா. அவள் குரல் கம்மியிருந்தது. சாப்பாட்டில் அவளுக்கு ரசனை இல்லை. அடிக்கடி பார்வை வாசல் பக்கம் சென்று திரும்பியது.

''ஏதாவது அவசர வேலை இருந்திருக்கும்'' என்றான் முரளி. அவனை அவள் நிமிர்ந்து பார்த்தாள். அவனுடைய குரலில் தொனித்தது கேலியா அல்லது சாதாரணமாகத்தான் சொல்லுகிறானா என்பதை அவளால் அறிய முடியவில்லை.

''நீங்கள் அப்பாவோடு நெருங்கிப் பழகுகிறீர்கள். உங்கள் மீது அவருக்கு மிகுந்த பாசமும், மதிப்பும் உண்டு..'' என்று சொன்னவள் மேலே சொல்ல முடியாமல் தவித்தாள். அவள் என்ன சொல்ல விரும்புகிறாள் என்பதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. தயங்கியவள் மீண்டும் சொன்னாள் :

''நீங்கள் சொன்னால் அவர் கேட்பார்.....''—அவனை உற்றுப் பார்த்தாள். ஓர் ஆணிடம் ஒரு பெண் வெளிப்படையாகச் சொல்ல முடியாத



ஒன்றை எப்படிச் சொல்வது என்று தெரியாமல் அவள் தவிப்பதைக் கண்டு முரளி துணுக்குற்றான்.

"நீ என்ன சொல்ல வேண்டும் என்கிறாய்....?" புரியாதவனைப் போல் கேட்டான் முரளி. சாரதா, கொஞ்சம் தயங்கினாள். இரண்டு முறை ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

அதை எப்படிச் சொல்வது? அதுவும் தந்தையைப் பற்றி. அவருடைய வாழ்வின் அந்தரங்கத்தைப் பற்றி....

"இப்படி அகால வேளையில் வெளியே போவதைத்தான்..." என்றாள் தட்டுத் தடுமாறிக் கொண்டு. இதைச் சொல்வதற்குள் அவளுடைய தன்மான உணர்வு தவித்த தவிப்பு... தன்னுடைய தந்தையைப் பற்றிய விஷயத்தை மாற்றானிடம் பேச வேண்டிய நிர்ப்பந்தத்தை நினைத்த போது, அவள் உள்ளம் கூசிக் குறுகியது. அவனை நிமிர்ந்து பார்க்கவே அவளுக்குத் தெம்பில்லை.

ஆனால் முரளி அன்னியனா? எவ்வளவு நெருக்கத்தோடு அந்தக் குடும்பத்தில் பழகியவன்! பேராசிரியர் அவனை அன்னியனாகவே எண்ணவில்லையே! அவள்தான் இன்னும் அவனைப் புரிந்து கொள்ளவில்லை!

"நீ என்ன நிலையில் இருக்கிறாயோ, அதே நிலையில்தான் நான் இருக்கிறேன், சாரதா! உனக்கு அவர் அப்பா; எனக்கு அவர் என்னைப் பெற்றெடுக்காத தந்தை. எப்படி அவரிடம் இதைப் பற்றி உன்னால் நேரிடையாகப் பேச முடியாதோ, அதே போல்தான் என்னாலும் பேச முடியாது."

"முரளி, நீங்கள் ஆண்."

"அது சரி, அதற்காக ஒருவருடைய அந்தரங்க வாழ்க்கையில் எப்படி நான் குறுக்கிட முடியும்?" என்று கேட்டான் முரளி தயக்கத்துடன்.

"ஊரில் அவரைப் பற்றி...."

"என்னுடைய காதிலும் விழத்தான் செய்கிறது. ஆனால் அதே ஊர் அவரிடம் கொண்டிருக்கும் மரியாதையையும், அவரை நினைத்துப் படும் பெருமையையும் மறந்துவிடக் கூடாது. சந்திரனில் கறுப்பு இருப்பதற்காக அதனுடைய பெருமையையோ, தன்மையையோ குறைத்து மதிப்பிடுவதில்லையே.......?"

"ஆண்கள் இதை இலேசாக ஒதுக்கி விடலாம். ஆனால், அவருக்குப் பின்னால் பேசப்படும் கேலிகளையும், அவதூறுகளையும் நான் கேட்க நேரிடும்போது..." சாரதாவால் மேலே பேச முடியவில்லை. துயரத்தினால் குரல் கம்மியது.

அவளுக்கு என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவது என்று தெரியாமல் முரளி தவித்தான். ஓர் இக்கட்டான நிலை. ஒளிவு மறைவின்றி வெளிப்படையாகவும் பேச முடியாமல், பேசாமலேயே ஒதுங்கவும் முடியாமல் திணறினான்.

வெளி வாசலுக்குப் பக்கத்தில் காரின் விளக்கொளி தெரிந்தது. இருவரும் திரும்பினார்கள். உள்ளே வந்த கார், போர்டிகோவில் நின்றதும் அதிலிருந்து பேராசிரியர் கமலசாமி மட்டும் இறங்கினார். காருக்குள்ளிருந்த பெண்மணி, கையை ஆட்டி விடைபெற்றுவிட்டு, காரைச் செலுத்திக் கொண்டு சென்றாள். வராந்தாப் படியில் ஏறிய கமலசாமி, வராந்தாவில் சாரதாவும், முரளியும் உட்கார்ந்திருப்பதைக் கண்டு துணுக்குற்றார். அவர் முகத்திலிருந்த மந்தகாசம் மறைந்து, கருமை படர்ந்தது.

"என்ன? நீங்கள் இன்னும் தூங்கவில்லையா....? திடீரென்று ஓர் அவசர வேலை வந்து விட்டது.... எனக்காகவா காத்திருக்கிறீர்கள்....?" என்று மடமடவென்று பேசிக் கொண்டே அவர்களை நெருங்கினார். அவருடைய பார்வை சாரதாவின்மீதே பதிந்திருந்தது. அவளுடைய முகத்தைச் சற்றுப் பயத்துடன் உற்று நோக்கினார். அவள், பதில் ஏதும் கூறாமல், வாசலைத் தாண்டிச் செல்லும் பியட் காரையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளது மௌனம் முரளியை உலுக்கியது.

"தூக்கம் வரவில்லை. இப்போதுதான் வந்தோம். சாப்பிட்டு விட்டுப் பேசிக் கொண்டிருக்கிறோம்" என்று கூறி,நிலைமையைச் சமாளித்தான் முரளி.

"சொற்பொழிவு எப்படி இருந்தது சாரதா?" என்று கேட்டுக் கொண்டே சோபாவில் அமர்ந்தார் கமலசாமி. அவளை நேருக்கு நேர் பார்க்கப் பயந்தவரைப்போல் பார்வையை வேறுபக்கம் திருப்பினார். அவள் கவனிக்காத போது அவள் முகத்தைத் திருட்டுத்தனமாகப் பார்த்தார்.

"பரவாயில்லை" என்று ரசனையில்லாமல் பதில் சொன்னாள் சாரதா. அவள் முகம் வாடியிருந்தது.

"உனக்குத் தூக்கம் வந்து விட்டது. ரொம்பக் களைத்திருக்கிறாய். போய்ப் படுத்துக் கொள்ளேன்" என்றான் முரளி. அவனுடைய பார்வையும், பேச்சும் அவளை அந்த இடத்தை விட்டுப் போகும்படி கெஞ்சின. அவள் புரிந்து கொண்டாள்.

"குட் நைட்...." என்று கூறிவிட்டு எழுந்து வீட்டுக்குள் சென்றுவிட்

# கீதைக் கதைகள்



'பந்தம்-தொந்தம் - உறவு எல்லாம் மாயையினால் விளைபவை.' 'மாயை நீங்கினாற்றான் உண்மையின் உண்மைச் சொரூபத்தைத் தரிசிக்கலாம்.'

## 4. மாயை

அத்தியந்த இரத்த பாசமே நிச்சயமானது எனத் தந்தையும் மகனும் நம்பினார்கள்.

'பந்தம் - தொந்தம் - உறவு எல்லாம் மாயையினால் விளைபவை. மாயை நீங்கினாற்றான் உண்மையின் உண்மைச் சொரூபத்தைத் தரிசிக்கலாம்!' என்றார் சந்நியாசி.

'சொந்த உறவுகள் எதுவுமற்றுத் தேசாந்திரியாக ஊர் சுற்றும் சந்நியாசிகள் மாயை என வரட்டுத் தத்துவம் பேசலாம். நான் தந்தை. இவன் என் மகன். இருவருக்குமிடையில் இரத்த உறவு இருக்கிறது. எனவே இந்தத் தொந்தத்தில் விளையும் பாசம் நிச்சயமானது' என்றான் தந்தை.

'நிச்சயம் என அடித்துப் பேசுவதும் மாயையைச் சார்ந்ததே. மனிதனின் பக்குவ நிலைகளுக்கு ஏற்ப மாயையின் தோற்றங்களும் மாறுபடுகின்றன' என்றார் சந்நியாசி.

'ஊர் மனைக்குள் புகுந்து இல்லற சுகம் மாந்துவோர் மனங்களில், சஞ்சலத்தையும் பேதலிப்பையும் ஏற்படுத்துவதற்காக மாயை என்ற சொல்லைப் பூச்சாண்டியாக உபயோகிக்கின்றீர்கள். மாயை என நீர் கருதுபவற்றைத் திருட்டாந்தமாக விளக்காவிட்டால், உம்மை....' எனத் தந்தை தோலோ தோலென உதடுகளைக் கடித்தான்.

'விளக்கம்! திருட்டாந்தம்!... அதையும் மனிதன் பக்குவ நிலையில் உணர்தல் வேண்டும். எதற்கும் வாருங்கள். சற்றுத் தூரம்வரை நடந்து வரலாம்' எனச் சந்நியாசி அழைத்தார். மூவரும் புறப்பட்டார்கள்.

வழியில் கடைத் தெரு. அங்கு ஒரு பொம்மைக் கடை. பல வகைப் பொம்மைகள் அடுக்கப்பட்டிருந்தன. மகனின் கவனம் குறிப்பிட்ட பொம்மை ஒன்றிலே நிலைத்தது. 'அப்பா, அதோ அந்தப் பாம்பை வாங்கித் தா' என மகன் கூறினான்.

'பாம்பா?... அது பொம்மையடா!' எனக் கூறித் தந்தை சிரித்தான். சந்நியாசியும் சிரித்தார்.

இரவாகியது. ஜனசஞ்சாரமற்ற வழிப்பாட்டையில் நடக்கலாயினர்.

திடீரென்று 'ஐயோ, பாம்பு!' என்று தந்தை கத்தினான்.

'பாம்பா? இது தாம்பு!' எனக் கீழே கிடந்த கயிற்றுத் துண்டை எடுத்து எறிந்து சந்நியாசி சிரித்தார். மகனும் சிரித்தான்.

நடையில் மேலும் தூரம் நகர்ந்ததும், பாம்புப் புற்று ஒன்று தெரிந்தது. புற்றின் நுழைவாயிலில் உழவன் ஒருவன் பாலூற்றிப் பூஜை செய்து கொண்டிருந்தான்.

அப்பொழுது பாம்பொன்று நெளிந்து, படம் எடுத்து ஆடியபடி புற்றுக்கு வெளியே லாகவமாக வந்தது.

'பாம்பு! பாம்பு!' என்று தந்தையும் மகனும் கத்தினார்கள்.

'உஸ்....நமது குலதெய்வம் நாகதம்பிரானைக் குழப்பாதீர்கள். அவர் இப்பொழுதுதான் பூஜையிலே பக்குவமாகக் கலக்கிறார்' என்றான் குடியானவன்.

'பாம்பு கடவுளா?' எனத் தந்தையும் மகனும் கேட்டார்கள்.

'வயல்வெளிகளிலே நாங்கள் பாடுபட்டு உழைக்கிறோம். பூச்சி புழுக்கள் நமது பயிரை அழிக்க வருகின்றன. அந்தப் பூச்சிகளை அழித்து, நமது பயன் முழுமையாகக் கிடைக்கும் வகையில் காவல் செய்யும் பாம்பு தெய்வம் இல்லையா?' என உழவன் பக்திப் பரவசத்துடன் கூறினான்.

சந்நியாசி சிரித்தார். தந்தையும் மகனும் எதுவும் புரியாமல் விழித்தார்கள்! — எஸ். பொன்னுத்துரை

---

டாள். அவள் சென்ற பிறகு நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார் பேராசிரியர். பிறகு, சோபாவிலிருந்து எழுந்தார்.

''வா, போகலாம். மணி பதினொன்றுக்கு மேலாகி விட்டது'' என்று கூறிக்கொண்டே வராந்தாவில் எரிந்துகொண்டிருந்த விளக்கை அணைத்தார். இருவரும் பக்கத்து அறைக்குள் நுழைந்தார்கள்.

முரளி, அறைக்குள்ளிருந்த ஃபோனை நோக்கி நடந்தான்.

''இந்த நேரத்தில் யாருக்கு போன்?'' என்று கேட்டுக் கொண்டே கட்டிலில் மல்லாந்து படுத்தார் பேராசிரியர்.

'' 'பாரதமணி' ஆபீஸுக்குத்தான். காலைப் பதிப்புக்குள்ள தலையங்கத்தை ஃபோனிலேயே 'டிக்டேட்' செய்துவிடுகிறேன்'' என்று கூறிவிட்டு 'ஃபோன் டயலை'ச் சுழற்றினான் முரளி.

படுத்துக் கொஞ்ச நேரத்தில் கமலசாமி தூங்கிவிட்டார். 'பாரதமணி'க் காரியாலயத்துக்குத் தலையங்கப் பகுதி முழுவதையும் ஃபோனிலேயே சொல்லி விட்டு, கட்டிலில் வந்து படுத்தான் முரளி. தூக்கமில்லாமல் புரண்டு கொண்டிருந்தான். அவனுடைய சிந்தனை பக்கத்துக் கட்டிலில் இலேசாகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்த பேராசிரியரையே சுற்றி வந்தது.

அவருக்கு வயது அறுபதை நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த வயதிலும் அவருக்கிருந்த கவர்ச்சியைக் கண்டு பிரமித்தான். அவ்வளவு கம்பீரமும்,

முகக் களையும் அந்த வயதில்கூட இருக்கும் போது, அவருடைய வாலிப வயதில் எப்படி இருந்திருப்பார் !

இப்போது தலை முடி நரைத்திருந் தாலும், அதிலுள்ள சுருள்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன ! நெற்றிக்கு மேல் சிறிது வழுக்கை விழுந்திருந்தது. ஆனால், வயதைக் குறைத்துக் காட்டி, பார்ப்பவர்களை ஏமாற்றும் சக்தி; அவ ருடைய காந்தக் கண்களுக்கும், எப் போதும் இதழ்களில் தவழும் புன் னகைக்கும் இருந்தது. வெற்றிலைக் காவி ஏறியிருக்கும் சிவந்த உதடுகளும், சிரிக் கும் போது சற்றே தெரியும் பல் வரிசை யும் அவர் முகத்தைத் திரும்பத் திரும் பப் பார்க்கும்படி தூண்டிக் கொண்டே யிருக்கும். எதிராளியுடைய இதயத் தையே தன் பார்வைக்குள் பிடித்து அடைத்து வைத்துக்கொள்வது போல் அவ்வளவு கனிவுடன் அவர் நோக்கு வார். அந்தப் பார்வையில் யாரும் அவ ருக்குச் சுலபத்தில் கட்டுப்பட்டு விடு வார்கள்.

எல்லாவற்றையும்விட மற்றவர்களை அவரிடம் ஒட்ட வைத்துக் கொண் டிருந்தது, அவருடைய இனிமையான பேச்சுத்தான். இதயத்தையே வருடிக் கொடுப்பது போல் அவ்வளவு அன் யோன்னியமாக இருக்கும் அவருடைய பேச்சின் தன்மை. எந்த விருந்திலும், கூட்டத்திலும் அவர் பக்கத்திலிருந்து அவரோடு உரையாடுவதில் ஆசை கொண்டு அவரைச் சூழ்பவர்களுக்கு அளவே இருக்காது.

எவ்வளவு எளிதில் பிறரைக் கவர்ந்து விடுகிறார் ! இதில் நடிப்போ அல்லது மற்றவர்களைக் கவர வேண்டும் என் னும் எண்ணத்தில் கையாளப்படும் செயற்கைப் பாணியோ ஏதும் இராது. இயல்பாகவே அவரிடம் சமைந்து விட்டவை.

இவ்வளவு கவர்ச்சிக்கும் சிகரமாக ஒளிவிட்டுக் கொண்டிருந்தது, அவ ருடைய அறிவுக் கூர்மை !

அவருடைய செயல் திறனையும், அறிவின் விசாலத்தையும் உணர்ந்து கொண்ட அரசாங்கம் பல குழுக்களுக்கு அவரைத் தலைவராக்கிப் பயன் பெற் றுக் கொண்டிருந்தது. மக்களிடையே யும், அதிகாரிகளிடையேயும், மிகுந்த மதிப்பையும் செல்வாக்கையும் பெற் றிருந்தார் பேராசிரியர்.

**இ**த்தனை இருந்தும், இவரிடம் இந்த ஒரே ஒரு குறை—அதுவும் எவ்வளவு பெரிய குறை....?

முரளி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். திரும்பிப் படுத்துக் கொண்டு பேராசிரியரைக் கவனித் தான். சன்னல் வழியாக நிலவு அவர் மீது விழுந்து கொண்டிருந்தது. நிம்மதி யாகத் தூங்கிக் கொண்டிருந்தார். நில வொளியில் அவர் முகம் தெளிவாகத் தெரிந்தது. தூக்கத்தில்கூட அவ ருடைய இதழ்களில் புன்னகையிருந்தது.

இந்த வயதிலும் இவரால் இதெல் லாம் எப்படி முடிகிறது? சாரதாவுக்குக் கோபம். பின்னே இருக்காதா? தந்தை யைப் பற்றி ஊரில் வதந்தி உலவும் போது..... அவள் மனத்திலும் முகத்தி லும் எவ்வளவு வேதனை படரும்? ஒரு மகள், தந்தையிடம் கூறித் திருத்தும் விஷயமா இது? பண்புள்ள ஒரு பெண், வாய்விட்டு இதைப் பற்றி வெளிப் படையாகப் பேசத்தான் முடியுமா....?

முரளி, வெகு நேரம் பேராசிரியரைப் பற்றிய நினைவிலேயே படுத்துக் கிடந் தான். இரண்டு மணிக்குத்தான் தூக்கம் அவனை ஆட்கொண்டது.

* * *

**'பா**ரதமணி'ப் பத்திரிகையின் காரியாலயத்துக்குள் வந்த சாமிநாதன், மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட் டான். கையில் ஒரு தினப் பத்திரிகையை மடித்து வைத்திருந்தான். அவன் வாசலில் நுழையும் போதே, அவனைக் கவனித்துவிட்ட பிரேமா, அவன் உள்ளே வந்ததும் அவனைக் கவனியாத வள்போல் 'டைப்' அடிப்பதில் மும்மூர மாக இருந்தாள். அவளைக் கடந்து உதவி ஆசிரியர்களின் அறை வாசலை அடைந்தவன், அங்கு நின்று சற்றுத் திரும்பி, பிரேமாவைப் பார்த்தான்.

''நீ நியூஸ் தர வேண்டாம். நானே சேகரித்துக் கொண்டேன்'' என்றான். அவனை வியப்புடன் நிமிர்ந்து பார்த் தாள் பிரேமா.

''எந்த நியூஸ்?'' என்று ஆவலோடு கேட்டாள்.

''எடிட்டர் — சாரதா நியூஸ் !''

''ஓ.....! எப்படி....?''

'' 'பாரதமணி'ப் பத்திரிகையின் நிருபர் நான். எனக்குத் தெரியாத நியூஸா?'' என்று கூறிவிட்டு அறைக்குள் நுழைந்து விட்டான்.

இன்னும் மற்ற உதவி ஆசிரியர்கள் வரவில்லை. டெலிபிரிண்டரில் வரத் தொடங்கிய செய்திகளைப் பிரேமா சேக ரிக்க ஆரம்பித்தாள். சாமிநாதன், நாற்காலியில் நன்றாகச் சாய்ந்தவாறு கையில் மடித்து வைத்திருந்த பத்திரிகை யைப் பிரித்தான். **(தொடரும்)**

இன்றும்
என்றும்
அணிய
விரும்பும்

# CCM-ன் ஸ்டேலாங்கர்

'ஆண்டிகிரிஸ்' பாப்ளின் ஷர்டிங்குகள்

# CCM-ன் ஸ்ட்ரேஞ்சர்

சிறப்பான பாப்ளின் ஷர்டிங்குகள்

இவை உங்களுக்கு உற்றதோழன்.
இவை அணிவதற்கு ஏற்றவை.
கசங்காதவை. மெர்ஸிரைஸ்
செய்யப்பட்டவை. இவை உயர்தர
எகிப்திய பருத்தியால்
தயாரிக்கப்பட்டவை



தி கோயம்பத்தூர்
காட்டன் மில்ஸ் லிமிடேட்
கோயம்பத்தூர்-15

CCM ரீடெய்ல் ஷோரூம்கள்:
17/93, ஒப்பனக்காரத் தெரு, கோயம்பத்தூர்-1
387, மெயின் ரோடு, கோவில்பட்டி

விநியோகிப்பவர்கள்



வெங்கடேஷ்
வஸ்திராலயா
கோயம்பத்தூர்-2 &
சென்னை-1

FDSCCM1416THA

# காணக் கிடைக்காத தங்கம்

## அத்தியாயம் இருபது

அருணகிரி அன்று அப்படிப் பேசிய பின் சொர்ணத்தம்மாள் அவன் பேச்சுக்கே போவதில்லை. தனக்கு இல்லாவிட்டாலும் அவனுக்கு நல்ல உணவு சமைத்துப் போடலானாள். வீட்டுக் கஷ்ட நிலவரம் எதையுமே அவன் தெரிந்து கொள்ள விடாமல் மூடி மூடி மறைத்து வைத்தாள். விளக்குக்கு எண்ணெய் வாங்கக் காசு இல்லாவிட்டாலும், அதைச் சொல்லாமல், 'கடைகளிலே எங்கும் கெரோசின் கிடைக்கலே; ஊரெல்லாம் பற்றாக் குறை' என்று கூறி மழுப்பி விடுவாள். அவ்வளவு பயமும் திகிலுமாகிவிட்டன அவளுக்கு! பெற்ற மனம் பித்து என்று சும்மாவா சொல்லியிருப்பார்கள்?

ஆனால் அருணகிரி வேளாவேளைக்குச் சரியாகச் சாப்பிடுவதில்லை. உற்சாகமாகவோ கலகலப்பாகவோ இருப்பதில்லை. எந்நேரமும் எதையோ பறிகொடுத்தவன் போல் துயரத்திலும் சிந்தனையிலும் ஆழ்ந்திருப்பான். இரவில் சரியாகத் தூங்குவதுமில்லை. ஓயாமல் படித்துக் கொண்டேயிருந்தான்.

மாதங்கள் பல உருண்டு ஓடின. அருணகிரியின் போக்கில் மாறுதல் ஏதோ நிகழ்வதாகத் தோன்றியது. ஆமாம்; கடந்த ஒரு வாரமாக அவனைப் பார்ப்பதற்கென்று இரண்டு மூன்று வாலிபர்கள் அடிக்கடி வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். இதைச் சொர்ணத்தம்மாளும் கவனித்தாள். யாராவது சிநேகிதக்காரர்களாக இருக்கும் என்று எண்ணி முதலில் அசட்டையாக இருந்து விட்டாள். பிறகுதான் அவளுக்குக் கொஞ்சம் விழிப்பு ஏற்பட்டது. அந்த வாலிபர்கள் பக்கத்துத் தெருவில் வசிப்பவர்கள் என்றும், வேலைவெட்டி எதுவுமில்லாமல் சும்மா இருப்பவர்கள் என்றும் ஆனால் ஏதேதோ சங்கம், மன்றம் என வைத்து நடத்துபவர்கள் என்றும் அக்கம் பக்கத்தார் வாயிலாக அறிந்து கொண்டாள். அவ்வாலிபர்களோடு, அப்பாவியான தன் பிள்ளைக்கு என்ன தொடர்பு இருக்கும், அவர்களுடன் இவன் எப்படிச் சேர்ந்தான், எதற்காக அவர்கள் அடிக்கடி இவனைத் தேடிக் கொண்டு இங்கே வருகிறார்கள் என்றெல்லாம் எண்ணிக் குழம்பி விவரம் ஏதும் புரியாமல் தவித்தாள்.

ஒரு நாள் —

அன்று அருணகிரி எங்கும் வெளியில் செல்லவில்லை. எவருடைய சைக்கிளோ ஒன்று வாங்கி வந்து வீட்டு வாசலில் நிறுத்தி அதை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் போட்டு மீண்டும் பூட்டுவதில் முனைந்திருந்தான். எல்லாம் பூட்டி உருவாக்கியபின் அந்தச் சைக்கிளைப் பார்த்த சொர்ணத்தம்மாளுக்கு அதில் ஏதோ சில மாற்றங்கள் தென்பட்டன.

ஆமாம்; அந்தச் சைக்கிளுக்கு மட்கார்டுகள் இல்லை. மணி இல்லை. விளக்கு இல்லை. வேறுசில பாகங்களும் இல்லை.

இது பற்றித் தன் பிள்ளையிடம் விசாரிக்க அவளுக்குப் பயம். அவன் வீட்டிலில்லாத சமயம் அவனைப் பார்க்க வந்த அந்த மூன்று வாலிபர்களில் ஒருவனிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து உசாவினாள் சொர்ணத்தம்மாள்.

அந்த வாலிபன் அவளை வியப்புடன் பார்த்து விட்டுச் சொன்னான்: ''என்னம்மா இப்படிக் கேட்கிறீங்க? உங்களுக்கு விஷயம் தெரியாதா? உங்க பிள்ளை அருணகிரி நாளையிலிருந்து ஐந்து நாள் — அதாவது நூற்றி இருபது மணி நேரம் — இடைவிடாமல் சைக்கிள் விடப் போறார்! நாங்கதான் அதுக்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறோம்.''

''ஐஞ்சு நாள் இடைவிடாமல் சைக்கிள் விடறதா? அது எப்படி முடியும் தம்பி?''

''எல்லாராலும் முடியாதுதானம்மா! அது ஒரு வீர விளையாட்டு! அதுக்கு ரொம்பப் பயிற்சியும், நெஞ்சுத் துணிவும் வேண்டும்.''

''சைக்கிளை விட்டு இறங்காம எப்படிச் சாப்பிடறது, தூங்கறது, மற்ற மற்ற காரியங்கள் செய்யறது?''

''சைக்கிளை ஓட்டிக்கிட்டே இவ்வளவையும் செய்து கொள்ளணும். கீழே கால் பட்டாலோ, எதையாவது பிடிச்சுக்கிட்டு நின்றாலோ பந்தயம் தோற்றுப் போச்சு.''

ஜெகசிற்பியன்

''என் பிள்ளை இப்படிச் சைக்கிள் விடுவானு தம்பி?''

''விடறேன்னுதானே முன்வந்திருக்கிறுர்!'' என்று சொல்லிச் சிரித்தான் வாலிபன்.

குலை நடுங்கிப்போன சொர்ணத்தம்மாள், ''இது உயிருக்கு ஆபத்தான விளையாட்டாச்சே?'' என்று குழறிக் கேட்டாள்.

''ஆபத்துத்தான். அதையும் எதிர்பார்த்தே இதில் இறங்கணும்.''

''ஐயோ!'' என்று அலறினுள் சொர்ணத்தம்மாள். ''எதுக்கப்பா இந்தப் பையன் இந்த அடாத காரியத்திலே இறங்கணும்?''

''எல்லாம் பணத்துக்குத்தான்.''

''பணத்துக்கா?''

''ஆமாம்மா! இருபத்தைஞ்சு ரூபா கடனு வேணும்னு எங்ககிட்ட கேட்டார் உங்க பிள்ளை. நாங்க எங்கே போவோம்? அதுக்குத்தான் இப்படி ஒரு யோசனை சொன்னேம். அவரும் உடனே ஒப்புத்துக்கிட்டார்.''

''அவனுக்கு எதுக்கு இப்பப் பணம்?''

''என்னம்மா ஒண்ணும் தெரியாதது மாதிரி கேட்கறீங்க? போன வருஷமே அவர் எஸ். எஸ். எல். சி.க்கு செப்டம்பர்லே பரீட்சை எழுதணும்னு இருந்தாராம். அது முடியலியாம். இந்த வருஷம் — அதாவது, அடுத்த மாசம்— எழுதப் போறுர். அந்தப் பரீட்சைக்குப் பணம் கட்டத்தான்.''

''அடப் பாவி! என்கிட்டச் சொல்லியிருந்தால் எருமை மாட்டை வித்தாவது அவனுக்குப் பணம் கொடுத்திருப்பேனே...!''

''மாட்டை விற்றுவிட்டால் அப்புறம் எப்படிச் சாப்பிடுவீங்க?'' என்று கேட்டு நகைத்தான் வாலிபன். ''நீங்க ஒண்ணும் பயப்படாதீங்கம்மா! உங்க மகன் சாதாரண ஆள் இல்லே. பல விஷயங்களில் அவரை நினைச்சு நினைச்சு நாங்கள் ஆச்சரியப்படறேம். கடவுள் அவர் பக்



கம் இருப்பார். இந்த ஏற்பாடு வெற்றிகரமாய் முடிஞ்சுட்டதானால் எங்கள் செலவெல்லாம் போக அவருக்கு ரொக்கமா ஓர் ஐம்பது ரூபாயாவது கிடைக்கும். அது தவிர, இவ்வூர் பெரிய மனிதர் ஒருவர் வெள்ளிக் கோப்பை ஒன்று பரிசளிப்பதாகவும் வாக்குக் கொடுத்திருக்கிறார்.''

பிரமை பிடித்தவள்போல் அப்படியே தலைமேல் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள் சொர்ணத்தம்மாள். அன்று முழுவதும் அவள் எதுவும் சாப்பிடவில்லை. இரவெல்லாம் தூங்கவும் இல்லை. ஒரே புலம்பல், பிரலாபம், ஒப்பாரி!...

ஐந்தாம் நாள் மாலை ஆறு மணி இருக்கும். அந்த மைதானம் ஜனக் கூட்டத்தால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

மைதானத்தின் நடுவே ஒரு பெரிய வட்டமாக மூங்கில் கழிகள் நட்டுக் கயிற்றுத் தடுப்பு கட்டப்பெற்றிருந்தது. அவ்வட்டத்தின் மத்தியில் சிறு மேடையுடன் கூடிய பந்தல். பந்தலைச் சுற்றி பெட்ரோமாக்ஸ் விளக்குகள் ஒளி சிந்திக்கொண்டிருந்தன. மைதானத்தின் நாலாபுறமும் ஒலிபெருக்கிகள் சினிமாப் பாட்டுக்களைப் பொழிந்தன.

சைக்கிள் வீரன் அருணகிரி கிட்டத்தட்ட நூற்றிருபது மணி நேரம் இடைவிடாது சைக்கிள் விட்டு, இன்னும் ஐந்து அல்லது பத்து நிமிடங்களில் — தான் குறிப்பிட்ட நேரப்படி — வெற்றிகரமாக இறங்கப் போகிறான்.

ஆயிரக்கணக்கான மக்களின் கண்கள், சைக்கிளில் மெல்லச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும் அவனையே ஆச்சரியத்துடன் மொய்த்துக் கொண்டிருக்கின்றன.

கடந்த ஐந்து தினங்களில் மக்களின் அன்பளிப்பாகச் சுமார் இருநூறு ரூபாய்க்கு மேல் உண்டியலில் சேர்ந்திருக்கிறது. அதனால் அவ்வீர விளையாட்டுப் பந்தயத்தை முன்னின்று நடத்தும் ஒரு மன்றத்தின் அங்கத்தினர்கள் வெகு சுறுசுறுப்போடும் உற்சாகத்துடனும் அங்குமிங்கும் ஓடியாடிக் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

இன்னும் சில நிமிடங்களில் இந்தச் சைக்கிள் பந்தய நிகழ்ச்சியை முடித்து வைத்துப் பாராட்டிப் பரிசளிப்பதற்காக ஒரு பெரிய மனிதர் தம் மனைவியோடு வரப்போகிறார். அவர் பெயர் சிவலிங்கம். சிறு தொழில் உதவி நிதிக் கார்ப்பரேஷனின் டைரக்டராகப் பணியாற்றுகிறவர். இயந்திரத் தொழில் நுட்பத் துறைக்கென அமெரிக்காவிலே ஐந்தாண்டுகள் பயின்று சிறப்புப் பட்டம் பெற்றவர். ஒரு புகழ் பெற்ற சமூக நலத் தொண்டரின் குமாரர். அவருக்கு இம்மாதிரியான வீர விளையாட்டுக்களில் மிகுந்த ஆர்வம். அவற்றை ஊக்குவிப்பதில் நாட்டம் உள்ளவர். ஏனென்றால் அவரே மாணவப் பருவத்தில் நீச்சல் வீரராக விளங்கியவர்.

அதோ, அவர் தம் இல்லத்தரசியோடு காரிலிருந்து இறங்குகிறார்...

நிகழ்ச்சி அமைப்பாளர்கள் ஓடிப் போய் அவர்களை வரவேற்று மேடைக்கு அழைத்து வந்து அமர்த்தினர்.

சரியாக மணி ஆறு.

சைக்கிளை மெல்ல வட்டம் போட்டு ஓட்டிக் கொண்டிருந்த அருணகிரியிடம் போய் ஒரு வாலிபன் ஏதோ கிசுகிசுத்தான். அருணகிரி மெதுவாகத் தன் சைக்கிளை மேடை அருகில் ஓட்டி வந்தான். அவனைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது. தனது சக்தியை எல்லாம் இழந்த நிலையில், வெறும் வாழைப் பட்டை போல் தொய்ந்து துவண்டு போயிருந்த அவன் தலையைக் கூட நிமிர்த்த முடியாமல் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தான்.

தலைவர் சிவலிங்கம் வந்து மேடையின் ஓரத்தில் நின்றார். அதே சமயம் அருணகிரியும் தன் சைக்கிளைக் கொண்டு வந்து அவர் அருகில் நிறுத்தினான். சிவலிங்கம் குனிந்து அவனுடைய தோளைப் பற்றினார். மற்றவர்கள் அவனை அப்படியே சைக்கிளிலிருந்து அலாக்காகத் தூக்கி மேடை மேல் நிறுத்தினார்கள்.

சிவலிங்கம் அவனது கையைப் பற்றிக் குலுக்கி விட்டுப் பெரிய ரோஜாப்பூ மாலையை அணிவித்தார். பிறகு வெள்ளிக் கோப்பை ஒன்றையும் பரிசளித்தார். அவ்வளவுதான்; அருணகிரியால் அதற்குமேல் நிற்க முடியவில்லை. மூர்ச்சை இழந்து அப்படியே மேடை மேல் சாய்ந்துவிட்டான். நிகழ்ச்சி அமைப்பாளர்கள் அவன் முகத்தில் தண்ணீர் தெளித்து ஆசுவாசப்படுத்தத் தொடங்கினர்.

மைதானத்தில் கூடி நின்ற மக்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

தலைவர் ஒலிபெருக்கியில் பேசினார். அருணகிரியை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினார். சற்றைக்குப் பின் அவன் மூர்ச்சை தெளிந்து மெல்லக் கண் விழித்தான்.

உடனே ஒரு வாலிபன் ஆரஞ்சு ரசம் நிறைந்த கண்ணாடித் தம்ளரைத் தலைவரிடம் கொடுத்து அதை அருண



இந்த டெலிபோனில் ரிசீவரை எடுத்து மேஜை மீது வைத்துவிட்டு 25 அடி தொலைவிலிருந்துகூடப் பேசலாம். அலுவலகங்களில் பைல்களை எடுத்தும் பார்த்துக் கொண்டே பதில் சொல்ல இது வசதியானது. இங்கிலாந்து நாட்டின் கண்டுபிடிப்பு.

- 'ஏஷியன் இன்டஸ்ட்ரி' - நாயக்

கிரிக்குப் பருகத் தருமாறு வேண்டிக் கொண்டான்.

இவ்வளவு நேரம் மேடை மேல் ஒரு நாற்காலியில் தலை குனிந்து அமர்ந்திருந்த தம் மனைவியிடம் அந்தப் பழரசத் தம்ளரைக் கொடுத்து அவளுடைய கையால் அவ்வீர இளைஞனுக்குப் புகட்டுமாறு சொன்னார் தலைவர் சிவலிங்கம்.

அவள் மெல்ல எழுந்து வந்தாள். பிரக்ஞை திரும்பிய நிலையிலும் சோர்ந்து கண் மூடிக் கிடந்த அருணகிரியின் அருகில் ஒற்றை முழந்தாளிட்டு உட்கார்ந்து அவன் முகத்தைக் குனிந்து நோக்கினாள். அவனும் தட்டுத் தடுமாறி எழுந்து அமர்ந்தான்.

அவனுடைய உலர்ந்த வாயில் பழரசத்தைப் பரிவுடன் புகட்டினாள் அவள். ஒரு மிடறு பருகிய அவன் சற்றே தெளிவும் தெம்பும் பெற்றவனாய்க் கண்களை மலர்த்தி அவளைப் பார்த்தான். மறுகணம் ஏதோ மின்அதிர்ச்சியால் தாக்கப்பட்டவன் போல் வெடுக்கென்று பின்னால் நகர்ந்தான். அடுத்தவினாடியே அவன் மீண்டும் பிரக்ஞை இழந்து சாய்ந்து விட்டான்.

அவள் — அந்தத் தலைவர் சிவலிங்கத்தின் மனைவி வேறு யாருமல்ல; நிர்மலாவேதான்!

இரண்டு மாதங்கள் ஓடிக்கடந்தபின் ஒரு நாள் —

''அம்மா! நான் எஸ். எஸ்.எல்.சி. யில் பாஸ் பண்ணிவிட்டேன்!'' என்று நீண்ட காலத்துக்குப் பிறகு முதல்முறையாகத் தன் தாயாரை நோக்கிப் புன்முறுவல் பூத்துக் கூறியவாறு கையில் ஒரு தினப் பத்திரிகையுடன் உள்ளே வந்தான் அருணகிரி.

சொர்ணத்தம்மாளின் அகமும் முகமும் மலர்ந்தன. பரவசக் கனிவுடன் தன் மைந்தனைப் பார்த்துவிட்டு மெல்லக் கண் மூடி, ''முருகா!'' என முணு முணுத்தாள் அவள்.

பத்திரிகையில் தேர்வுப் பட்டியலிலே வெளியாகியிருந்த தன் நம்பரைத் திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டே திண்ணையில் போய் உட்கார்ந்தான் அருணகிரி. மகிழ்ச்சிக் குறுகுறுப்பால் கட்டவிழ்ந்து கொண்ட அவன் மனம் எங்கெங்கோ பாய ஆரம்பித்தது.

சட்டென்று சிந்தனை அறுந்தவனாய் ஒருவிதப் பரபரப்புடன் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டான் அருணகிரி.

'என்ன விந்தையான சந்திப்பு அது! அவள் — அந்த நிர்மலா — அவளுக்கு இவ்வளவு சீக்கிரம் திருமணம் ஆகுமென்று நான் கனவில்கூட நினைத்துப் பார்க்கவில்லையே! பெரிய இடத்தில் தான் மாப்பிள்ளை கிடைத்திருக்கிறார்; அதிருஷ்டக்காரி! ஆனால்... ஆனால்?... என் துரதிர்ஷ்டம் எந்த மாதிரி நிலைமையில் இருந்துகொண்டு அவளைச் சந்திக்க வேண்டியதாகி விட்டது! என்னைப் பற்றி அவள் என்ன நினைத்திருப்பாள்? சந்து முனைகளில் துண்டை விரித்துப் போட்டு விட்டு வாசாலக்குடன் பேசிக் கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு பலவிதமான பல்டி, பஸ்கிகள் செய்து காட்டிக் காசு பண்ணும் மலிவு ரக வித்தைக்காரன் போல் நானும் நூற்றிருபது மணிநேர இடைவிடாச் சைக்கிள் சவாரி என்ற பெயரில் என் உடலையும் உயிரையும் இம்சித்துக் காட்டி ஜனங்களைப் பரிதாபப்பட வைத்து அதன் மூலம் காசு பறிக்கும் மட்டரகமான வழியில் இறங்கி விட்டேன் என்று எண்ணியிருப்பாளா? அல்லது உண்மையிலேயே ஒரு வீர சாகசச் செயலை வெற்றிகரமாகச் சாதித்தவன் என்று என் மீது மதிப்பும் பரிவும் கொண்டிருப்பாளா?'

சட்டென்று தன்னையே கடிந்துகொள்கிறவன் போல் ஓர் அலட்சியச் சிரிப்பு சிரித்தான் அருணகிரி.

'என்னைப் பற்றி அவள் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டுமே! அதனால் எனக்கென்ன லாபம்? அல்லது நஷ்டம்? நான் ஏன் அதற்காகக் கவலைப்பட வேண்டும்?'

மறுகணம் அவனையறியாமலே அவன் மனம் கனகாவை நோக்கிப் பாய்ந்தது.

'பாவம், அந்தப் பெண்ணின் கதி என்ன ஆகியிருக்கும்? அவள் வீட்டை விட்டு எங்கோ ஓடிப் போய்விட்டாளாமே! அது நிஜமான தகவலாயிருக்குமா? அல்லது அந்தத் திமிர் பிடித்த நாசகாரி நீலாம்பாள் சும்மா என்னைப் பயமுறுத்தவோ, பழி வாங்கவோ அப்படி ஒரு பொய்க் கதை கட்டிவிட்

அம்மா,

# ஸாத்தே குளுகோஸ் பிஸ்கட்டுகள்

## எவ்வளவு நன்றாக இருக்கின்றன?




ஸாத்தே குளுகோஸ் பிஸ்கெட்டுகளின்
தரம் அப்படி: தூயப் பொருள்
களிலிருந்து தயாரிக்கப்பட்டவை:
புரதச்சத்து நிறைந்த கோதுமை மாவு,
பாலேடு மற்றும் சக்தி செறிந்த
குளுகோஸ்: இவற்றை ஒருங்கே
கொண்டு பொன்னிறத்தில்
கிடைக்கின்றன. சிறப்பான பாக்கிங்கில்
வருவதால் என்றென்றும் புதுமை,
சுவையோ அலாதி!




**ஸாத்தே பிஸ்கெட்டுகள் திருப்தி அளிக்கின்றன.**

டானா? இல்லை, நிஜமாகவே அவள் ஓடித்தான் போயிருப்பாளோ? வயசுக்கு வந்த ஒரு பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு ஒரு தாயார்க்காரி அத்தனை நீசத்தனமாக நடந்தால் அதை யார்தான் சகிக்க முடியும்? அந்த நீலாம்பாளுக்கு அது வாடிக்கையான வழக்கம் என்றே தோன்றுகிறது. தனக்குத் தேவைப்படும்போதெல்லாம் யாராவது ஒருவனை — அதிலும் என் போல் இருக்கிற இளம் பையனைப் பார்த்து — ஏமாற்றி இழுத்துக்கொண்டு வந்து விடுவாள் போலும்! பாவம், அவளை நினைத்தால் எனக்குக் கோபமே வருவதில்லை; அநுதாபமே படுகிறேன்! சில சமயம் அவளின் வஞ்சிக்கப்பட்ட வாழ்க்கையை எண்ணிக் கண்ணீரும் வடித்திருக்கிறேன்!... அன்றிரவு அவளுடைய தீய நோக்கத்துக்கு என்னையே அழைத்து வந்து விட்டதைப் பார்த்து அந்தப் பெண் கனகா பெரிதும் அதிர்ச்சி அடைந்து விட்டாள் அல்லவா? அந்த அவமானத் துயரம் தாளமாட்டாமல்தான் அவள் வீட்டை விட்டு ஓடிப் போயிருப்பாள்! ஒருகால் என் மீதும் அவளுக்குச் சந்தேகம் தோன்றியிருக்குமோ?....'

அருணகிரியின் உடல் மெல்ல நடுக்கமுற்றது. தாள முடியாத துயரத்தால் கண்கள் கலங்கி நீரை வடித்தன.

'அப்படி ஓடிப் போன அவள் என்ன ஆகியிருப்பாள்? வாழ்க்கையை வெறுத்துத் தற்கொலை பண்ணிக் கொண்டு விட்டிருப்பாளோ?'

முட்டிக் கால்களுக்கிடையே தலையைப் புதைத்துக் கொண்டு உள்ளூறப் பொருமிக் குலுங்கினான் அவன்.

''சார்!''

திடுக்குற்று நிமிர்ந்தான் அருணகிரி. வாசலில் வெள்ளைச் சீருடை அணிந்திருந்த பியூன் ஒருவன் சைக்கிளில் வந்து இறங்கி நின்றான்.

''என்ன?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்து வாசலுக்குப் போனான் அருணகிரி.

''நீங்கதானே அருணகிரி?''

''ஆமாம்....''

''உங்களை எங்க டைரக்டர் அழைச்சுக்கிட்டு வரச் சொன்னார் சார்!''

''எந்த டைரக்டர்?''

''ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ்...''

''ஓ.... சிவலிங்கமா?''

''ஆமாம், சார்!''

''எங்கே?''

''ஆபீசுக்குத்தான்.''

சற்றே தயங்கிய அருணகிரி, ''எதற்கு?'' என்று கேட்டான்.

''எனக்குத் தெரியாது சார்! உங்களை உடனே வரச்சொன்னார்.''

''சரி; வரேன்னு சொல்லு!''

பியூன் போய் விட்டான். அருணகிரிக்கு ஒரே குழப்பமாகிவிட்டது. உள்ளூற ஒருவித பயமும் தோன்றி உலுக்கியது.

'என்னைப் பற்றி அந்தப் பெண் நிர்மலா தன் கணவரிடம் ஏதாவது தாறுமாறாகப் புகார் சொல்லியிருப்பாளோ? அதனால் கோபமடைந்த அவர் என்னைக் கண்டிப்பதற்காக நேரில் வருமாறு அழைக்கிறாரோ?'

இப்படிப் பல்வேறு சிந்தனைக் குழப்பங்களுடன் அந்தச் சிறுதொழில் நிதி உதவி கார்ப்பொரேஷன் காரியாலயத்துக்குப் புறப்பட்டான்.

''வணக்கம், சார்!''

''வாருங்கள், மிஸ்டர் அருணகிரி! இப்படி உட்காருங்கள்.''

அந்தக் காரியாலயத்தின் ஓர் அழகான தனி அறையில் அமர்ந்திருந்த டைரக்டர் சிவலிங்கம் அன்பும் கனிவுமாக அவனைப் பார்த்துப் புன்முறுவலுடன் வரவேற்று ஓர் இருக்கையைக் காட்டினார்.

பயத்தால் கால்கள் வெட வெடக்கப் பணிவுடன் ஒடுங்கி அமர்ந்தான் அவன்.

சற்று நேரம் ஏதோ சிந்தனையிலிருந்த சிவலிங்கம் மெல்ல நிமிர்ந்து அவனைப் பட்டும் படாமலும் பார்த்து, ''நீங்க எதுவரை படிச்சிருக்கிறீங்க?'' என்று நிதானமாகக் கேட்டார்.

''இந்த செப்டம்பர் பரீட்சையில் தான் ஸ்கூல் ஃபைனல் தேறியிருக்கிறேன் சார்!''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம்.''

சிறு பொழுது மௌனமாயிருந்த சிவலிங்கம் மீண்டும் கேட்டார்: ''உங்களுக்குத் தாய், தந்தை?....''

''அப்பா இல்லை, சார்! லாரி டிரைவராயிருந்த அவர் ஒரு விபத்திலே காலமாகி விட்டார். அம்மா இருக்கிறாங்க.''

''ஜீவனம்?''

''ஒரு மாடு இருக்குது சார்! அது கறக்கிற பாலை விற்று....''

''சரி; உங்களுக்கு ஏதாவது தொழில் பயிற்சி உண்டா?''

''கொஞ்ச காலம் ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடையில் வேலை கற்றுக்கிட்டேன், சார்!''

புன்முறுவலுடன் தலையாட்டிக் கொண்ட சிவலிங்கம் தம் கோட்டு ஜேபியிலிருந்து நாலாக மடித்த ஒரு காகிதத்தை எடுத்து மேஜையின்மேல் விரித்து வைத்தார்.

என்ன ஆச்சரியம்! அது அருணகிரி வரைந்த மூன்று சக்கர விளையாட்டு சைக்கிள் படம்! அன்றொரு நாள் இரவு கார் ஷெட்டிலே அவனோடு நின்று பேசிக் கொண்டிருந்த நிர்மலா அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டு போன அதே படம்!

(தொடரும்)

# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

*அதற்குச் சிறிது விளக்கம் தேவை*

அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து. இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்தமுள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்பவாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.

இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற் கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான விநியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்தமாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்து வைக்க இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்வீஸ் இன்ஜினீயர்களும் பணியாற்றுகின்றனர்.

*வெல்டிங் துறையில் முதல்வர்கள்!*

**IOL**

OC-1768 TAM



## தலைகீழ்ப் பாடம்

இந்தக் கடைக்காரர் ஏன் போர்டைத் தலைகீழாக மாட்டியிருக்கிறார்? அதில்தான் விஷயமே அடங்கியிருக்கிறது என்கிறார் கடைக்காரர். போர்டு தலைகீழாக இருப்பதால் எல்லோருமே கவனித்து எங்களிடம் வருகிறார்கள். அப்படி வருகிறவர்களை நாங்கள் வெறுங் கையுடன் அனுப்பாமல் அவர்களிடம் சில பொருள்களை வியாபாரம் செய்துவிடுகிறோம். இதனால் வியாபாரம் அதிகமாகிறது என்று பெருமையுடன் கூறிக்கொள்கிறார்.

'என்பூ -- 'டிட்பிட்ஸ்'





எந்த விளக்காக இருந்தாலும் விளக்குக்கு மிக அருகில் உள்ள நிழலைப் போக்க இன்னொரு விளக்குத் தேவை !

கண் எல்லாவற்றையும் பார்க்கத்தான் செய்கிறது. எனினும் கண்ணுக்கு அருகில் உள்ள இமையைப் பார்க்க கண்ணாடி வேண்டியிருக்கே !

சம்ஸ்கிருத ஸ்லோகம் - ''தேஜ்''



''எனக்கு நீங்கள்.....! உங்களுக்கு நான்....!''

''ஆகா! இப்போதுதான் என் காது குளிர்ந்தது. மறுபடியும் இதே வார்த்தையைச் சொல், கமலா!'



''எனக்கு நீங்கள் டாக்சி சார்ஜ் கொடுங்கள்! உங்களுக்கு நான் பஸ் சார்ஜ் தருகிறேன்! வீட்டுக்குப் போகலாம், இருட்டி விட்டது.''



## பஞ்சு அல்ல, பறவை!



படத்தைப் பார்த்தால் உங்களுக்கு என்ன தோன்றுகிறது ? ஏதோ பஞ்சுக் குவியல் மாதிரி இருக்கிறதல்லவா ? ஆனால் இது பஞ்சல்ல, பறவை! என்ன பறவை தெரியுமா? வெள்ளை ஆந்தை! ஆம், ஸ்விட்ஜர்லாந்தில் பேர்ன் என்ற நகரத்தில் உள்ள ஒரு மிருகக் காட்சிச் சாலையில் இந்த அதிசயப் பறவை இருக்கிறது! இந்த வெள்ளை ஆந்தை தலையை ஒருபுறமாகத் திருப்பிக் கொண்டிருப்பதால் அதன் ஒரு கண் மட்டும்தான் படத்தில் தெரிகிறது! - சரோஜா ராமச்சந்திரன்

## பெரியார்



## கவனிக்க !

மதிப்புக்குரியவர்களைக் காணச் சென்றால் எலுமிச்சம்பழத்துடன் காணச் செல்வோம். ஆனால் நேபாளிகள் எலுமிச்சம் பழத்துக்குப் பதிலாக, வெங்காயத்தை எடுத்துச் செல்கிறார்கள். ஆலய நிவேதனத்துக்குக்கூட அவர்கள் வெங்காயத்தைப் பக்தியுடன் எடுத்துச் செல்கிறார்கள்.

தகவல்: பி. வி. கிரி

ஆதாரம்: 'வெங்காய வைத்தியம்'



## கணவருக்குப் பரிசு



காலையில் எழுந்ததும் காப்பி தயாரித்து மனைவிக்குத் தருகிற கணவன் உண்டு. மனைவி தலைவலி என்று படுத்து விட்டாலோ அல்லது அவசரக் காரியமாகத் தாயார் வீட்டுக்குப் போய்விட்டாலோ, ''என்ன செய்வது?'' என்று கையைப் பிசைகிற கணவனும் உண்டு. ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசில் முன்ஸ்டர் என்னும் நகரில் இவ்விதக் கணவர்களுக்குக் கைகொடுக்க ஒரு தனிப் பள்ளிக்கூடமே இருக்கிறது. மனைவி இல்லாதபோது (இருக்கும்போதும்கூட) வீட்டுக் காரியங்களைத் திறம்படச் செய்வது எப்படி ? என்பதைக் கணவன்மார்களுக்கு இப்பள்ளியில் கற்றுக் கொடுக்கிறார்கள். துணிகளுக்குச் சீராக இஸ்திரி போடுவது எப்படி? உடைந்த பித்தானுக்குப் பதிலாக வேறு பித்தான் தைப்பது எப்படி? சமையல் செய்து குழந்தைகளுக்குப் பரிமாறுவது எப்படி ? என்று பலவிதப் பயிற்சிகள் தருகிறார்கள். -- பூ.பி.எஸ்.

# கொடி மலர்

## குணசீலன்

அறிவிப்பாளர் வரிசையாகப் பெயர்களை அறிவித்துக் கொண்டிருக்கிறார். அவசரம் அவசரமாக ஒருவர் மாற்றி ஒருவர் மேடையில் ஏறுவதும், 'பளிச்! பளிச்!' என்றுபுகைப்படத்தின் 'ஃப்ளாஷ்' மின்னுவதும், கைகுலுக்கல்களும் சரமாரியாக நடக்கின்றன. மேடையிலிருந்து அனைவரும் கைகளில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த விருதுகளுடனும் வாழ்வில் மறக்க முடியாத அனுபவத்தை எட்டிவிட்ட மகிழ்ச்சியுடனும் கீழே இறங்கி வருகின்றனர்.

''திரு பாஸ்கரன், சிறந்த கதை வசனகர்த்தா, தமிழ்நாடு'' — அறிவிப்பாளர் அறிவிக்கிறார். என்னுடைய பச்சை குஷன் பொருத்தப்பட்ட நாற்காலியை விட்டுக் கம்பீரமாக எழுகிறேன் நான்.

எழுந்தவுடனேயே என்னைச் சுற்றிப் பலமாக எழுந்த கைதட்டல், என் மேல் — என் திறமையின் மேல் அவர்கள் எவ்வளவு ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள் என்பதைப் புலனாக்குகிறது. என்னுடைய உடல் முழுக்க அந்த மனோகரமான சூழ்நிலையில் சிலிர்க்கிறது.

மௌனமாகத் தலையைக் குனிந்து கொண்டே, இப்போது சபை முழுக்க, ஏன், நாடு முழுக்க என்னையே வியப்புடன் நோக்கி நிற்கிறது என்ற உணர்வு என்னை உறுத்த, மேடையில் ஏறுகிறேன்.

பாரதக் குடியரசுத் தலைவரிடமிருந்து இந்த ஆண்டின், நாட்டின் சிறந்த கதை வசனகர்த்தா என்ற பரிசைப் பெற்றுவிட்டு, அவரிடம் முதன் முறையாக நேருக்கு நேர் நின்று கைகுலுக்கும்போது என் உள்ளம் எந்த அளவுக்குப் பெருமிதம் கொள்கிறதோ, அதே அளவுக்குச் சொல்ல முடியாத வேதனையையும் அடைகிறது.

'பளீர்!' என்று என் முகத்தில் ஒரு 'ஃப்ளாஷ்!' சரமாரியாகக் கைதட்டல்கள்! நன்றாகக் கவனிக்கிறேன். சபையின் கடைசிப் பகுதியில் இருந்தவர்களெல்லாம்என்னை நன்றாகப் பார்க்க முடியாததால் எழுந்து நின்று கொண்டு கைதட்டி ஆரவாரம் செய்கிறார்கள்.

ஜனாதிபதி கலந்து கொள்ளும் கூட்டம், இதில் கலந்து கொள்பவர்கள் எல்லாரும் பெருந்தலைகள் என்பதையும் மறந்து, பின்னால் இடம் கிடைத்துவிட்ட பெருந்தலைகள் மறைக்கிறதே என்று எழுந்து நின்று ஆரவாரம் செய்கிறார்கள் என்றால் என்னுடைய திறமைமீது அவர்கள் அவ்வளவு மதிப்பு வைத்திருப்பதாகத்தான் பொருளா? என் மனம் என் உடலையே பகுதி பகுதியாகக் குத்திக் கிளறுகிறது. என்னுடைய கண்கள் வெப்பத்தால் பொங்க, இமைகள் அழுந்த மூடுகின்றன. இவற்றுக்கெல்லாம் காரணம் என்னுடைய எழுத்துத் திறமைதானா? உண்மையாக இதற்குரிய பரிசை வாங்க வேண்டியவன் நானேதானா?

சிந்தித்துக் கொண்டேயிருக்கிறேன். மனத்தின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் நிலை தடுமாறி, என்னுடைய ஆசனத்தில் நன்கு சாய்ந்து உட்கார்ந்து கொள்கிறேன்.

அடுத்து ஜனாதிபதி பேசுகிறார். கலைஞர்களைப் பாராட்டி, அவர்களது திறமையை வானளாவப் புகழ்கிறார். நடுவில் என்னுடைய திறமையை ஒரு முக்கியத்துவம் கொடுத்துக் கூறி, இது போன்ற சிறந்த கருத்துப் படைப்பாளிகள் நிறைய இனிமேல் வரவேண்டும் என்று புகழும்போது.. எழுந்து நின்று, ''இல்லை! இல்லை! அந்தப் படத்துக்கு நான் கதை வசனமே எழுதவில்லை'' என்று கத்திவிட வேண்டும் போலிருந்தது.

அந்தக் கூட்டம் எதற்காகக் கூட்டப்பட்டிருக்கிறது, யார் பேசுகிறார்கள் என்பதை உணர்ந்து என்னை நானே அடக்கிக் கொள்கிறேன்.

ஒரு வழியாகக் கூட்டம் முடிந்து, தலைவர் கிளம்பி விட்டார். அதுவரையில் மௌனமாய் இருந்த கூட்டம், மெல்லப் பேச ஆரம்பித்துப் பிறகு பலமாகப் பேசுகிறது. மூலைக்கு மூலை, ஒருவருக்கொருவர் கூறும், 'கங்கிராஜுலேஷன்ஸ்!', 'எக்ஸலன்ட்!', 'கீப் இட் அப்' போன்ற சொற்கள் என் செவிகளில் அலை மோதுகின்றன.

இந்தப் பாராட்டுதல்களைப் பெறும் ஒவ்வொரு கலைஞனின் உள்ளமும்தான் எவ்வளவு பெருமிதத்தை அடைய முடியும்! ஏன் என்னால் இந்தப் பாராட்டுதல்களைப் பெற இயலாமற் போகிறது? 'மனசாட்சி' என்ற ஒன்று மனிதனுக்குத் தோன்றாமலே போயிருந்தால் எவ்வளவு சுலபமாக உணர்ச்சிகளை அடக்கி ஆண்டுவிட முடியும்! சே! என்னிடம் ஒரு நாள் ஏற்பட்ட ஓர் இழிவான ஆசையின் காரணமாகத்தான் எவ்வளவு மனம் புழுங்க வேண்டியிருக்கிறது. என்னையே நொந்து கொள்கிறேன்.

அனைவரும் என்னைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கின்றனர். ரசிகர்கள், பத்திரிகை நிருபர்கள் அனைவரும் பற்பல கேள்விகளை விடுத்து என்னைப் பாராட்டும்போது எழுந்து போய் விடலாமா என்று தோன்றுகிறது. இவர்கள் நிச்சயம் போக விடமாட்டார்கள் என்று தெரிந்த பின்பும் முயற்சி செய்வதில் பலன் இல்லை என்று மரம் போல் அமர்ந்து கொள்கிறேன். பலவிதமான பதில்களை என் வாய் தானாகவே, பழக்கத்தின் காரணமாக, — செயற்கையாக உதிர்த்துக் கொண்டிருக்கிறது.

எல்லாமே முடிந்து, நான் வெளியே கிளம்பும்போது, அதுவரையில் செய்திப்படம் எடுத்துக் கொண்டிருந்த காமிராமேனும் எல்லாவற்றையும் மூட்டை கட்டிக் கொண்டு கிளம்புகிறார்.

வெளியே வந்த பிறகு கூட்டம் நடந்த இடத்தைப் பார்வையிடுகிறேன், வெளியிலிருந்தே. கூடம் முழுக்கக் காலி. பச்சை பச்சையாக, சீட்டுக் கட்டுக்களைக் கீழே பரப்பி விட்டது போல், காலியாக இருந்த குஷன் நாற்காலிகளும், பெரிய மேஜையும், பூந்தொட்டியும், மைக்குகளும் தெரிகின்றன. அவைகளைக் கண்டுசிரிக்கிறேன்.

எங்களுக்காக, பிரத்தியேகமாக ஒதுக்கப்பட்டிருந்த விருந்தினர் மாளிகையில் இடவசதி செய்து தரப்பட்டிருந்ததால் அதை நோக்கி நடையைக் கட்டுகிறேன். கொஞ்ச தூரம்தான். அதை அடைந்து விடுகிறேன்.




பட்லர்களின் தலைகுனிவுகள் எனக்கு ஏற்படுத்தும் மரியாதை, மாடிப் படி ஏறும்போது படிகளில் விரிக்கப்பட்டிருந்த ரத்தினக் கம்பளம் ஏற்படுத்தும் அல்லது கூட்டும் கௌரவம் போன்றவையெல்லாம் மற்றவர்களுக்கே உரியது, எனக்கு அல்ல என்று முன்னமேயே — சென்னையிலேயே புரிந்து கொண்டிருந்தும், இங்கே எனக்கு, எனக்கு உரித்தல்லாத பட்டத்தைக் கொடுத்தபின் கிடைக்கும் போது ஏற்றுக் கொள்ள முடியாமல் தலை குனிகிறேன்.

என் கைகளில் சாவிக் கொத்து சுழன்று கொண்டிருக்கிறது. அறையின் கதவைத் திறந்துவிட்டு, மறுபடியும் நன்றாக மூடிவிட்டு, ஷூவையும் ஸாக்ஸையும் கழட்டும் வரை, பயங்கரமானதோர் அமைதியுடன் இருந்த நான், அவை முடிந்த பிறகு தடாலெனக் கட்டிலில் விழுகிறேன்.

பரபரவென என் கையில் இருந்த விருதைப் பிரித்துப் படிக்கிறேன். என் பெயர் — என் சாதனைகளெல்லாம் அழகாகப் பொறிக்கப்பட்டு என் தூங்கிக் கிடக்கும் உள்ளுணர்வைத் தூண்டி விடுகின்றன.

''சத்தியமாக அந்தக் கதை வசனத்தை எழுதியது சேது மாதவன்தான், நான் இல்லை'' என்று இனிமேல் நான் கத்தித்தான் என்ன பலன் ஏற்படப் போகிறது?

மௌனமாக அதைச் சுற்றி விட்டுப் படுக்கையில் அமர்ந்து கொண்டு இரண்டு கைகளாலும் கோத வலையைக் கசக்கிப் பிழிகிறேன். நேரத்தைப் பார்க்கிறேன். இன்னும் விமானத்துக்கு மூன்று மணி நேரம் இருக்கிறது. என்ன செய்வது?

நாற்காலியில் தலையை நன்றாகச் சாய்த்துக் கொண்டு, எதிரே இருந்த மேசையில் இரண்டு கால்களையும் குறுக்காகப் போட்டுக் கொண்டு என்னுடைய விரல் முட்டியினால் மேஜையில் வேகமாக, பலமாக, நிறைய நேரம் ஆத்திரம் தீரத் தட்டிக் கொண்டிருந்த பிறகு, என்னுடைய கைப் பையைத் தூக்கிக் கொண்டு, ஷூவை மாட்டிக் கொண்டு கிளம்புகிறேன், விமான நிலையத்துக்கு.

விமானத்தில் ஏறுகிறோம். விமானம் கிளம்பி விட்டது. என் உள்ளத்தில் எங்கோ தமிழ் நாட்டில் ஒரு மூலையில் இருக்கும் சேது மாதவன் நிழலாடுகிறான்.

சேதுமாதவன்...... சேது மாதவன்! பழையனவற்றைச் சிறிது அசை போடுகிறேன், கண்ணை மூடிய நிலையிலே.

அன்று எங்கள் படப்பிடிப்புக் குழு செங்கல்பட்டுக்கு வெளிப்புறக் காட்சிக்காகப் புறப்பட்டது. அப்போது அந்தப் படத்துக்கு, கதை, வச

ஷம், டைரக்ஷன் பொறுப்புக்களை ஏற்றிருந்தது நான்தான். செங்கல்பட்டிலே போய்க் காதல் காட்சியைப் படம் பிடிப்பதற்குத் தேவையானவைகளைத் தயார் செய்து கொண்டிருக்கும் போதுதான் எனக்குப் புரிந்தது, பாடல் பதிவு செய்து வைத்திருந்த டேப் ரிக்கார்டருடன் இன்னும் சோமு வந்து சேரவில்லை என்று. . அவனையும், இன்னும் இரண்டு பேர்களையும் தனிக் காரில் வரச் சொன்னது எவ்வளவு தவறாகப் போயிற்று என்று நொந்து கொண்டேன்.

வெய்யிலோ கண்டபடி ஏறிக் கொண்டிருந்தது. இனிமேல் அவன் வந்து, ரிக்கார்டரிலிருந்து மைக் கனெக்ஷன் கொடுத்து, படப்பிடிப்பு நடக்கும் இடத்தில் பாடலை ஒலிபரப்புவதற்குத் தேவையானவைகளைத் தயார் செய்வதற்குக் குறைந்தது இரண்டு மணி நேரமாவது ஆகும். நேரத்தை வீணாக்குவானேன் என்று செங்கற்பட்டு நகருக்குள் காரை எடுத்துக் கொண்டு சுற்றினேன்.

அப்போதுதான் சேதுமாதவன் என் கண்ணில் பட்டான். அவனும் நானும் எஸ்.எஸ்.எல். ஸி. வரை ஒன்றாகப் படித்தவர்கள். அதன் பின்னர் நான் கல்லூரிக்குப் போய் இந்த உலகில் நுழைந்த பிறகு அவனைக் காணவே முடியவில்லை. தெருவில் அவனைக் கண்டவுடன்தான் என் கவலையெல்லாம் எப்படி மறைந்து உள்ளம் புத்துணர்வு கொண்டு துள்ளியது!

காரை உடனே நிறுத்தினேன்.

''டேய் ! சேது மாதவா !''

உடனே அவன் திரும்பினான். ஒரே வியப்பு!

''டேய்! பாஸ்கர்.... இங்கே எங்கேடா... ஸாரி.... இங்கே எங்கே வந்தீங்க ?''

அவன் தடுமாற்றம் எனக்குப் புரிந்தது. சிரித்தேன். ''வீட்டுக்குப் போகலாம். வர்றியா ?'' முதலில் ஆவல் பொங்க அழைத்த சேது மாதவனின் முகம் பின்னர் ஏனோ கறுத்தது. பின்னால்தான் அதன் காரணம் எனக்குப் புரிந்தது.

''ஆகட்டும். காரிலே ஏறு. உங்க வீட்டுக்கு விடறேன். உங்க வீடு எங்கே ?''

''உங்க காரிலேயே ஏறிக்கிட்டு என் வீட்டுக்கு நான் உங்களை எப்படி அழைச்சுக்கிட்டுப் போறது...?''

''பரவாயில்லை. வாப்பா, சேது மாதவா! நான் இன்னும் பழைய பாஸ்கர்தான் !''



**சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெறும் சிறப்புச் சிறுகதைகள் அனைத்திலும் சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுப்பதில் வாசகராகிய உங்கள் அபிப்பிராயமும் கோரப்படுகிறது. ஆகவே இந்த இதழையோ அல்லது இந்தக் கதை அச்சாகியுள்ள பக்கங்களையோ பத்திரமாக வைத்திருக்கவும்.**

**ஆசிரியர், கல்கி**

அவன் வழிகாட்ட, கார் ஒரு பெரிய பங்களா முன்னால் நின்றது. 'ஒருவேளை உணவுக்காகக் கஷ்டப்பட்ட சேதுமாதவனுக்கா இவ்வளவு பெரிய பங்களா?' என்று வியந்து நின்ற எனக்கு விரைவில் பதில் கிடைத்துவிட்டது. அந்தப் பங்களாவை ஒட்டியிருந்த ஒரு மிகச் சிறிய சந்துக்குள் அவன் நுழைந்தபோதுதான் காரைப் பங்களா வாயிலில் நிற்க வைத்த காரணம் புரிந்தது. அந்தக் குறுகிய சந்தில், ஒரு சிறிய வீட்டுக்குள் வாசல் நிலை இடிக்காதவாறு இருவரும் உள்ளே குனிந்து நுழைந்தோம்.

ஒரு பழைய மர நாற்காலியை எனக்குப் போட்டு விட்டு ஒரு முக்காலியில் அவன் அமர்ந்து கொண்டு, ''லட்சுமி !'' என்று உரக்கக் குரல் கொடுத்தான்.

உடனே ஒரு பெண் வெளியே வந்தாள். அவளுடைய முகம் பொலிவுடன் லட்சுமிகரமாகத் திகழ்ந்தாலும் அதில் மெருகேறுவதற்கு இன்னும் நிறைய இருக்கிறது என்றும் காட்டியது. பென்சிலினால் வரைந்தது போன்ற வெறுமையான, திரட்சி இல்லாத அவளுடைய முகத்தைக் கண்டவுடனேயே சேது மாதவனின் நிதி நிலைமை புரிந்து விட்டது.

''என் மனைவி லட்சுமி. உங்களுக்குக் கல்யாணப் பத்திரிகை அனுப்ப முடியல்லே. மன்னிச்சுக்கோ. ஏன்னா எங்க கல்யாணம் நடந்ததே வேறமாதிரி'' என்று கூறிவிட்டுச் சிரித்தான் சேது.

லட்சுமி தலை குனிந்தாள். அதன் பிறகு நாங்கள் ஏதேதோ பேசினோம். பழைய பள்ளி வாழ்க்கை, ஒரு தடவை கட்டுச் சோற்றுடன் திருக்கழுக்குன்றம் போனது என்று என்னென்னவோ பேசினோம். முடிவில் அவனுடைய தற்போதைய நிலைமையைப் பற்றிப் பேசியவுடன் கண் கலங்கி விட்டேன். தன்னுடைய எழுத்துத் திறமை ஒன்றையே தொழிலாகக் கொண்டு, வயிறு வளர்க்கும் தொழில்முறை எழுத்தாளன் அவன் என்பதை உணர்ந்தவுடன் அவனைப் பற்றி அறிய ஆவல் ஏற்பட்டது.

அவன் என்னிடம் கொடுத்த அவனுடைய பிரசுரம் ஆகாத கதைகளையும், நாவல்களையும் பார்வையிட்டேன். நான் பார்த்தவற்றில் ஒன்றுதான் அவன் தன் உள்ளத்து உணர்ச்சிகளைக் கொட்டியிருந்த பெரிய நாவலான 'விதியென்னும் வீணை'. நாவலின் தலைப்பே இனம்தெரியாத ஒரு கிளுகிளுப்பை என்னுள் ஊட்டி, என்னைக் கவர்ந்து விட்டது. மெல்ல நாவலின்மேல் மேலோட்டமாகப் பார்வையைச் செலுத்தினேன்.

ஒரு பிரபல வீணைக் கலைஞனை நாயகனாகவும் உலகின் சிறந்த டென்னிஸ் ஆட்டக்காரியை நாயகியாகவும் கொண்டு, இருவருக்கிடையே எழும் மனப் போராட்டங்களை அருமையாக, இயற்கையாகச் சித்திரித்திருந்தான். அந்த நாவலில் வந்த பாத்திரப் படைப்புக்களும், அதில் அவன் வைத்திருந்த மையக் கருத்தும் பொருள் பொதிந்த உயிர்த் துடிப்பான வசனங்களும் அரை மணி நேரம் படித்தவுடனேயே என்னை ஈர்த்து விட்டன.

எனக்குத் தெரியாமலே அவனிடத்தில் வளர்ந்துவிட்ட திறமையைக் கண்டு, மகிழ்ச்சி



# இவற்றை இப்பொழுது அழித்துவிடாதீர்கள்!

**இந்தக் கரங்களின் நிபுணத்துவம் தான் ஜவுளித் தொழிலுக்குத் தேவையான, இறக்குமதியாகும், இன்றியமையாத நூற்றுக் கணக்கான கச்சாப் பருத்திவகைகளைத் தரம் பிரிக்க வல்லது.**

**நிபுணர்கள்:** இந்தியாவின் பருத்தி வியாபாரிகள்.

**அவர்களுடைய குறிக்கோள்:** பருத்தி விலைகள் ஏறுவதைத் தடுத்தல். பருத்தி வியாபாரத்தைத் தட்டுத் தடங்கலின்றி நடத்துவதன் மூலம் இந்தியாவிற்கும், அதன் பஞ்சாலைகளுக்கும், அதன் மக்களுக்கும் சேவை புரிவது.

**எதிரி:** கச்சாப் பருத்தி இறக்குமதிகளை ஒருமுகப்படுத்தல்.

**ஆபத்து:** தொழில் அனுபவம் அற்றவர்களால், இன்றியமையாததொரு பதனிடும் சேவை வேரோடு அழிதல். பருத்தியின் விலைகளில் தீவிரமான ஏற்றம். பஞ்சாலைகளுக்கு பருத்தி சப்ளையின் தட்டுப்பாடு. ஏற்றுமதி வாணிபத்தின் அழிவு.

**பலி:** இன்று, இந்தியாவிலுள்ள 650 பஞ்சாலைகள். நாளை, நாடு முழுவதும்.

**பாதுகாப்பு:** பருத்தி வியாபாரமும், பருத்தி, உணவுதானியங்கள், எண்ணெய் வித்துகள் ஆகிய விவசாயப் பொருள்களின் விநியோகத்தில் ஈடுபட்டுள்ள வாணிபத்துறை முழுவதுமே நாசமாக்கப்பட இருக்கிறது. ஆனால் விநியோகத் துறையில் உள்ள அனைவருடைய ஒற்றுமையும் சக்திமிக்கது. அவர்களுடைய குடும்பத்தினர் உட்பட 6½ கோடி வோட்டுகள் பலம் கொண்ட ஒற்றுமை இது!

பிரேரேபிக்கப்பட்டுள்ளது ஆல் இந்திய காட்டன் ஃபெடரேஷனின் ஆட்ஹாக் கமிட்டி

**ஜனநாயகமான வியாபாரத்தில் பாதுகாப்பாளர்களுடன் சேருங்கள். ஏற்கெனவே 6½ கோடி வோட்டு பலம் இருக்கிறது!**

டெலிபோன் பில் ஏராளமான தொகைக்கு வராமல் இருக்க டெலிபோன்மீது ஒரு கண் இருக்கட்டும். அன்னியர்கள் உங்களுக்குத் தெரியாமலே நேரடி டிரங்க் டயலிங் செய்து பில் தொகையை பெருக்காமல் பார்த்துக் கொள்ளுங்கள். **ஒரு நிமிடம் நேரடி டிரங்க் டயலிங்கில் பேசுவதினால், இடத்தின் தூரத்தைப் பொருத்து, டெலிபோன் மீட்டரில் பல உள்ளூர் கால்கள் கூடுதலாகிவிடும்.**



# அனாவசியமாக உபயோகிக்காதீர்கள்

**எதற்காக ஏராளமாக கட்டவேண்டும்**



**இந்திய தபால்-தந்தி இலாகா**

பொங்க அவனை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டு விட்டேன்.

என்னுடைய உள்ளத்தில் அப்போதே அதைத் திரைப்படமாக்க வேண்டும் என்ற வெறி கிளம்ப என் மனம் தொழில் ரீதியில் பாய, அங்கேயே முறையான பேச்சு வார்த்தைகளைத் தொடுத்து விட்டேன்.

அந்தக் கதைக்குப் பத்தாயிரம் ரூபாய் சன்மானமாகக் கொடுத்து, திரைப்படமாக்கும் உரிமையைப் பெறும் சமயத்தில் தர்ம சிந்தனையுடன்தான் இருந்தேன். நண்பனின் திறமையை மதித்துத்தான் நடந்து கொண்டேன். திடீரென்று எப்படி என்னிடம் சுயநலப் பேய் தலைதூக்கியது, எப்படி நான் போய் வலிய, சூழ்ச்சியில் சிக்கினேன் என்றுதான் எனக்குப் புரியவில்லை. அந்தக் கதையை என்னுடைய சொந்தக் கதையாகவே பெயர் பண்ண வேண்டும் என்ற வெறியில், புகழ் எனக்கு வந்து திரை உலகில் மாறாப் பெயர் நிலைக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான், மூலக் கதை சேதுமாதவன் என்று விளம்பரப்படுத்த முடியாது என்றும் அவனிடம் உரிமை வாங்கிக் கொண்டேன்.

இன்று அந்த ஈனமான செயலுக்காக, அதை என் சொந்தக் கதை என்று விளம்பரம் செய்ததற்காக மனம் புழுங்குகிறேன்.

அவன் ஏக்கம் பொங்கும், வாழத் துடிக்கும் தன் மனைவியைப் பார்த்தான். என்னைப் பார்த்தான். தலையைக் குலுக்கிக் கொண்டு நிதானமாக, அழகாகக் கையெழுத்தைப் போட்டான்.

அவ்வளவுதான். காரியம் முடிந்துவிட்டது. நன்றி கூறிவிட்டு, எதிர்காலக் கற்பனைகளுடன் படப் பிடிப்புக்குத் திரும்பினேன். எவ்வளவு விரைவில் முடிக்க முடியுமோ, அவ்வளவு விரைவில் பழைய படத்தை முடித்துவிட்டு, 'விதியென்னும் வீணை'யை ஆரம்பித்தேன்.

சேதுவின் ஒவ்வொரு வசனமும் மணி மணியாயிருந்தது. ஒன்றைக்கூட மாற்ற வேண்டிய தேவை இல்லாமல் போக, அப்படியே நடிகர்களிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லிப் படமாக்கினேன்.

நான் எதிர்பார்த்த அதே வெற்றிதான். படத்துக்கு பணம், புகழ் இரண்டும் கிடைத்தன. பத்திரிகைகளும், மக்களும் என் அரிய படைப்பைப் பற்றிப் பாராட்டியபோது தலை நிமிர்ந்து கம்பீரமாக நின்றேன்.

ஆனால் நான் ஆக ஆக ஒவ்வொரு வசனத்தையும், சம்பவச் சிறப்பையும் தனித் தனியாக எடுத்துக் கூறி அதன் நயத்தையும், ஆழத்தையும் கூறி என்னை எல்லாரும் பாராட்டத் தொடங்கியபோது எனக்குச் 'சுரீர்' என்று உரைக்கத் தொடங்கியது.

போகப் போக என்னை எல்லோரும் பாராட்டும் சொற்களெல்லாம் என்னைப் பல்லாயிரம் ஊசிகளாகக் குத்தின. என்னால் நிம்மதியாக, முழு மனத்துடன் அந்தப் பாராட்டுக்களின் சாரத்தை ஏற்றுக் கொள்ள முடியவில்லை; தவித்தேன்.

இந்தச் சமயத்தில்தான் எனக்குத் தலை சிறந்த பரிசாகிய ஜனாதிபதியின் பரிசு—நாட்டிலேயே சிறந்த கதை, வசனகர்த்தா என்ற பட்டம் — அளிக்கப்படுகிறது. வேதனை தாளாமல் துடிக்கிறேன்.

உண்மையான காரண கர்த்தாவை — கொடிக்கு விதையூன்றி, நீரூற்றி, அதை மலரச் செய்து அம்மலரை எனக்கு அளித்த சேது மாதவனை நினைத்து அழுகிறேன்.

சேது மாதவன்!.... சேது மாதவன்!

விமானம் சென்னை விமான நிலையத்தை அடைந்து விடுகிறது. விமானத்திலிருந்து இறங்கும் எனக்கு மாலைகள், வரவேற்புக்கள் எல்லாம் சொல்லி மாளாதவை. தெரு முழுக்க, மிகப் பெரிய சாதனையை ஏற்படுத்திவிட்ட என்னை எதிர்நோக்கி ஒரே ஜனத் திரள். என்னுடைய காரில் ஏறி, எதையும் ஏற்றுக் கொள்ளும் திராணியின்றி என் பங்களாவை அடைகிறேன்.

சிரித்த முகத்துடன் முகமெல்லாம் மகிழ்ச்சியால் மலர என் மனைவி என்னை ஆவல் ததும்ப வரவேற்கிறாள். ஏனோ எனக்கு லட்சுமியின் முகம் நினைவுக்கு வருகிறது. என்னால் ஒன்றுமே தாள முடியவில்லை. இரவு முழுக்கத் தூங்காமல் என் மனைவியிடம் இது வரையில் என் மனத்தில் ரகசியமாய்ப் பூட்டி வைத்திருந்த விஷயங்களை யெல்லாம் திறந்து கொட்டி, நன்றாக அழுகிறேன்.

அவளுடைய ஆதரவான பரிவு, இத்தனை நாள் ஏங்கிக் கொண்டிருந்த மனத்துக்கு நிம்மதியைக் கொடுக்கிறது. என்னுடைய துன்பங்களை யெல்லாம் ஒன்று விடாமல் கேட்டு, எனக்கு ஆறுதல் கூறும் அவளைக் காணத் தெய்வம் போல் இருக்கிறது. என்னுடைய மனத்துக்குச் சாந்தி அளிக்கக் கூடிய அருமையானதொரு மாற்று வழியைத் தருகிறாள் அவள்....

சேது மாதவன்! அவன் தன்னுடைய கண்களையே நம்பவில்லை. நான் மறுபடியும் அவன் வீடு தேடிப் போவேன் என்று அவன் நினைக்கவே யில்லை.

''நீங்களா? மறுபடியும் இங்கேயா? வீடு மாறிட்டோமே, எப்படிக் கண்டுபிடிச்சீங்க?''

அவன் வீடு மாறித்தான் இருந்தான். பெரிய பங்களாவாக இல்லா விட்டாலும், ஓரளவுக்குக் கச்சிதமான வீட்டில்தான் இருந்தான்.

''அக்கம் பக்கத்திலே விசாரிச்சேன். சௌக்கியமா? வீட்டிலேயும் சௌக்கியம்தானே?''

''சௌக்கியம்னு பார்த்தா தெரியலையா? இந்த அளவுக்காவது நாங்க வசதியா இருக்கோம்னு அதுக்கு நீங்கதானே காரணம்.''

குத்திக் காட்டுகிறானா சேதுமாதவன்? எனக்குப் புரியவில்லை. அப்போது லட்சுமி கையில் காப்பியுடன் உள்ளே நுழைகிறாள். அவளை முன்பு பார்த்தது போல் ஏறிட்டுப் பார்க்கும் துணிவு எனக்கில்லை. குனிந்த தலை நிமிராமல் இருக்கிறேன்.

''சேது!'' மெல்ல ஆரம்பிக்கிறேன். 'விதியென்னும் வீணை' படத்துக்கு எனக்கு 'அவார்ட்' கிடைச்சிருக்கு. படமும் நல்லா ஓடிக்கிட்டிருக்கு.''

''கேள்விப்பட்டேன்.'' — சேது அமைதியாகக் கூறுகிறான். அந்த அமைதி என்னை உலுக்குகிறது.

''அது உனக்குச் சேரவேண்டியது''-நான்.

## அர்த்தமே வேறுதான்!



□ 'டாக்' என்னும் லத்தின் சொல்லி லிருந்து டாக்டர் என்னும் சொல் பிறந்தது. இதற்கு நுண்ணறிவு படைத்தவர் என்று பொருள். இது முதலில் மருத்துவர்களுக்கு வழங்கியது; பிறகு இலக்கிய ஆராய்ச்சியாள ருக்கும் வழங்குவதாயிற்று.

□ சிலர் ரங்கநாதன் என்பதை இரங்க நாதன் என்று எழுதுகிறார்கள். இது தவறு. இரங்கநாதன் என்றால் இரங்கலுக்குத் தலைவன் அதாவது துக்கத்துக்குத் தலைவன் என்று பொருள். அரங்கநாதன் என் பதே சரி.

(மகாவித்துவான் மே. வி. வேணு கோபாலப் பிள்ளை சொன்னது)

தகவல்: பி. வி. கிரி

"நீங்கதான் அதோட உரிமையை வாங் கிட்டீங்களே. இனிமேல் எனக்கு எப்படிச் சொந்தம்?"

ஒன்றுமே நடவாததுபோல் அவன் கேட்ப தைத் தாங்கும் சக்தி எனக்கு இல்லை.

"சேது!" கத்திவிட்டேன் நான். "என் மனசைக் கொலை பண்ணாதே சேது. ஒவ் வொரு நிமிஷமும் நான் வேதனை தாளாம வெந்துகிட்டு இருக்கேன்."

"வேதனைப்படற அளவுக்கு என்ன தப்பு நீங்க செஞ்சுட்டீங்கன்னுதான் எனக்குப் புரியலே, பாஸ்கர்."

உரிமையுடன் பாஸ்கர் என்று அவன் அழைத்தவுடன் எனக்கு மெய்சிலிர்க்கிறது.

"நியாயமா அந்த 'அவார்ட்' உனக்குக் கிடைச்சு இருக்க வேண்டியது இல்லையா? சேது, நீ எப்படி உன் மனசை, உன்னோட உணர்ச்சியை அடக்கிக்கிட்டு இருக்கேன்னு எனக்கு ஆச்சரியமா யிருக்கு. உனக்குச் சேர வேண்டிய பேரும் புகழும்..."

"பாஸ்கர்! உங்களுக்கு நல்லாத் தெரியும், நான் ஓர் எழுத்தாளன்னு. எழுத்தாளன் ஏன் கதையை எழுதறான்? முதல்லே அவ னோட ஆத்ம திருப்திக்காகக் கதை எழுதறான். பணம் சம்பாதிக்கணுமேங்கிற ஒரே குறிக் கோளா யிருந்தால் இந்த நிச்சயம் இல்லாத எழுத்தாளன் வாழ்வை அவன் ஏத்துக்கணும் கிறது இல்லே. எவ்வளவோ நல்ல தொழில் செய்யலாம்.

"தன்னோட மனசு உணர்ச்சிகளை எழுத ணும், நான் அநுபவிச்சதை, பார்த்ததை எல் லாம் உலகுக்குச் சொல்லணும்னு ஆசைப் பட்டு, அதை நிறைவேத்திக்கறதுக்காகத் தான் எழுதறான். ஆனா அதே சமயத்திலே அந்த எழுத்து பணம் கொடுக்குதுன்னா அதை வேணாம்னு யாருமே சொல்லப் போறதில்லே.

"அந்தக் கணக்குப்படி பார்த்தா என்னோட ஆத்மதிருப்திக்காக, 'விதியென்னும் வீணை'யை எழுதினேன். அதுக்கு அளவுக்கு மேலே அதிக மான பணமும் நீங்க கொடுத்துட்டீங்க. ஓர் எழுத்தாளன் ஒரு நாவலைப் பிரசுரமாக ணும், மத்தவங்க படிக்கணும், அதனாலே ஒரு ஐந்நூறோ அறுநூறோ வரலாம்னுதான் எழுத றானே தவிர, கதை சினிமா ஆகணும்னு எழுதறதில்லே.

"நீங்க என்னோட கதையைச் சினிமா வாக்கி, அதுக்குப் பத்தாயிரம் கொடுத்தா அது என்னோட அதிர்ஷ்டம்தானே தவிர துன்பம் என்ன இருக்கு?"

"சேது! ஆத்ம திருப்திக்காக நீ எழுதி இருந்தாலும் மூலக் கதைகூட என்னோட துன்னு நான் போட்டுக்கிட்டது எவ்வளவு சுயநலம். உனக்கு வரவேண்டிய புகழ் எல்லாம்....."

"பாஸ்கர்! மனிதனுக்குப் பலவீனம் எல்லாவிதத்திலேயும் இருக்கு. நீங்க புகழுக்கு அடிமை ஆயிட்டு, இப்போ மனச்சாட்சியாலே வேதனைப்படறீங்க. இப்போ உங்களை நினைச்சா எனக்குப் பெருமையாத்தான் இருக்கு. மனச்சாட்சியை மதிக்கிற மனுஷனா உங்களோட உணர்வு உங்களை எழுப்பிச் சிடுன்னு சந்தோஷம்தான்.

"எனக்குக்கூடத்தான் ஒரு பலவீனம் வந் துச்சு. அந்தக் கதை வசனமெல்லாம் என் னோடதுதான்னு ஊரெல்லாம் பரப்பலாமான்னு நூட்டுப் பார்த்தேன். ஆனா உடனே அந்தப் பலவீனத்தை அடக்கிக்கிட்டேன் நான். ஏன்? வலியப் போய் எழுத்தாளன் புகழுக்கு ஆசைப் படக் கூடாதுன்னுதான். நான் இதுவரைக் கும் சத்தியமா யார்கிட்டேயும் அது என் னோட கதைன்னு சொன்னதில்லே. சொல்ல வும் மாட்டேன்.

"உண்மையிலேயே ஒவ்வொருத்தரும் அந்தக் கதையைப் புகழறாங்கன்னா உடனே உள்ளூற அதை நினைச்சு நானே சந்தோஷப் பட்டுப்பேன். ஒரு சிருஷ்டிகர்த்தாவுக்கு அதுதானே தேவை? என் காது படவே நாலு பேர் என்னைத்தான் புகழறாங்கன்னு தெரி யாம புகழறப்போ நான் மனசுக்குள்ளே எவ் வளவு ஆனந்தப்படுவேன் தெரியுமா?

"நான்தான் இதை எழுதினேன்னு பாராட்டுதல் எனக்கு வேணும். என் படைப்பு நல்லாயிருக்குன்னு அதுக்குப் பாராட்டுக் கிடைச்சா அதுவே எனக்குப் போதும். அதே மாதிரி மனசு மாறிட்ட நீங்களும் நினைக்கக் கூடாதா பாஸ்கர்?"

"நிச்சயமா சேது! ஆனா, எனக்கு, என்னோட அந்தப் பலவீனத்துக்கு ஒரு மன் னிப்பு நிச்சயம் தேவை. கிடைக்குமா?"

"நிச்சயமா!"

"உன்கிட்டேயிருந்து?"

சேது கண் கலங்கி அவனையே வெறித்துப் பார்க்கும் என்னைப் பார்க்கிறான் ஒருகணம்.

"நிச்சயம் என்கிட்டேயிருந்து மன்னிப்புக் கிடைக்கும், பாஸ்கர்!"

காரில் ஏறுகிறேன்.



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி-பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 மதருஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி மேற்கொள்ளும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

## நீண்ட காலச் சிட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

## குறுகிய காலச் சிட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி – பம்பாய் – பெங்களூர் – கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VI - 330 - 1001 -'70

# எடைக்கு எடை தங்கம் தான்.

## நீங்கள் பயன்படுத்தும் ஒவ்வொரு எஸ்ட்ரெலா பேட்டரியும் அப்படியொரு நன்மதிப்பை உங்கள் உள்ளத்தில் ஏற்படுத்தும்.

Focus P10C TH

கொடுக்கும் பணத்திற்குக் கட்டித் தங்கம் போன்ற மதிப்பு--அதைத் தான் உங்களுக்குத் தருகிறது எஸ்ட்ரெலா. காகித, பிளாஸ்டிக், உலோக உறையிட்ட பேட்டரிகளில் எதைத் தேர்ந்தெடுப்பினும் சரி, மேம்பட்ட செயல்திறனுடன் அது அதிக காலம் உழைக்கக் காண்பீர்கள். எல்லாமே கசியாத் தன்மையுடையவை. உங்கள் நம்பிக்கைக்கு உகந்த பத்தரை மாற்றுப் பண்புகள் இவை.



**எஸ்ட்ரெலா**
பேட்டரிகள்

**அதிக சக்தி, அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ் லிமிடெட்



**தூத்துக்குடியில் நடந்த மக்சோடே கால்பந்தாட்டப் போட்டியில் தென்னிந்திய ரயில்வே முதல் தடவையாக நாலு கோலில் மாபெரும் வெற்றி பெற்றது. அதே சாதனை சென்னை நேரு ஸ்டேடியத்திலும் தொடர்ந்தால் அது அதிசயம்தானே ?**

# தூத்துக்குடி திரும்பியது!

"தென்னிந்திய ரயில்வே கால்பந்தாட்டக்காரர்களுக்கு மறக்க முடியாத மாட்சு தூத்துக்குடியில் நிகழ்ந்த மக்சோடோ போட்டி. இந்தப் போட்டிக்குப் பிறகு எங்கள் கோஷ்டிக்கு ஒருவிழிப்பேஏற்பட்டிருக்கிறது. நாங்கள் கோவா சீசா குழுவினரை இறுதியாட்டத்தில் நாலு கோல் போட்டு வென்றது எங்களுக்கு உத்வேகத்தைக் கொடுத்தது!" என்று கூறினார் திரு பூரங்கையா, தென்னிந்திய ரயில்வே கால்பந்தாட்டக் குழுவின் பயிற்சியாளர்.

"உங்கள் குழுவில் உள்ள சர்வதேச ஆட்டக்காரர்கள் யார் யாரென்று சொல்ல முடியுமா?"

"அருமைநாயகமும் பஷீரும் சர்வதேசக் கால் பந்தாட்டப் போட்டியில் கலந்து கொண்டிருக்கிறார்கள். மாத்யூ ஜோசப் இந்தியப் பந்தாட்டங்களிலெல்லாம் ஆடி யிருக்கிறார். நாங்கள் ஒரு திறமையான ஆட்டக்காரரை மட்டுமே நம்பியிருக்கவில்லை. எங்கள் குழு முழுக்க இணைந்து ஆடும் வல்லமை பெற்றிருப்பதால் எங்களுக்கு வெற்றி வந்தடைகிறது!" என்று பூரிப்புடன் சொன்னார் 'கோச்' பூரங்கையா.

சில நல்ல ஆட்டக்காரர்களையும் தென்னிந்திய ரயில்வே கால்பந்தாட்டக் குழுவில் சேர்த்து, தம் கோஷ்டியில் உள்ள ஆட்டக்காரர்களுக்கும் விடாது பயிற்சியளித்ததால் அக்குழு, தமிழ்நாடு கால்பந்தாட்டப் போட்டியில் இறுதியாட்டத்தை வந்தடைந்தது. முதல் ஆட்டம் 'டிரா'வாக, இரண்டாவது இறுதி ஆட்டத்தில் கோவா சீஸா குழுவினர் மீது முதல் கோலைப் போட்டுக் காப்டன் தங்கப்பன் ஆட்டத்துக்கு விறுவிறுப்புக் கொடுத்தார். பஷீர் அடித்த நேரடிப் பந்து இரண்டாவது கோலாகப் பரிணமித்தது. பிறகு தென்னிந்திய ரயில்வே ஆட்டக்காரர்கள் வைத்தது வரிசையாயிற்று. இறுதி ஆட்டம்வரையில் நன்றாக ஆடிய கோவா ஸீஸா குழுவினர் இறுதியாட்டத்தில் 'பங்க்' ஆகிப்போனது அனைவருக்குமே வருத்தம்!

அருமைநாயகம் அருமையாகப் பந்தைக் கமலேசனிடம் தர, அவரும் தப்பாமல் மூன்றாவது கோலை அடித்துப் புகழ் பரப்பினார். ஜனார்த்தனன் அடித்த பந்தைச் சீஸா கோல்கீப்பர் மோரியீ நழுவ விட்டு நாலாவது கோல் தென்னிந்திய ரயில்வேக்குக் கிட்டச் செய்தார். சீஸா ஆட்டக்காரர் பெரைரா மட்டும் ரயில்வே குழுவினர் மீது ஒரு கோல் போட்டு ரசிகர்களுக்கு ஆறுதல் அளித்தார். 'தூத்துக்குடி சென்னையிலும் திரும்பிவிட்டது' என்று ஒரு கால்பந்தாட்ட ரசிகர் விமர்சித்தது ரொம்பப் பொருத்தம்! கால் பந்தாட்டமென்றால் 'அடி, உதை' என்று மக்கள் உணர்ச்சிவசப்பட்டுப் போகிறது வழக்கம். இம்மாதிரி அசம்பாவிதம் தலைகாட்டாமல் ஆட்டத்தை நிர்வகித்த கால்பந்தாட்டக்கழகத்தலைவர் திரு விட்டலும் அவரது சகாக்களும் பாராட்டுக்குரியவர்கள். தலைவர் திரு விட்டல் 'ஸ்போர்ட்ஸ் ரைட்டர்ஸ் கிளப்' புக்கும் ரூ. 2,500 நிதி வழங்கி நல்லதொரு கைங்கரியத்தைச் செய்திருக்கிறார்.

நாலு ஆட்கள் தூக்கும்படி கனமான தமிழ்நாடு கால்பந்தாட்ட ஷீல்டைப் போலீஸ் கமிஷனர் திரு குப்புசாமி ரயில்வே குழுவினருக்கு வழங்கினார். கோச் பூரங்கையா வெற்றிப் பெருமிதத்தோடு தம் ரயில்வே கோஷ்டி ஷீல்டைத் தூக்கிக் கொண்டு வர, வீர நடை கட்டினார்.

— குண்டுமணி





# அன்றாட வாழ்வோடு இணைந்தது சிமெண்ட்

தண்ணீர்த் தொட்டிகள்,
வடிகால்களுக்குத்
தேவையான குழாய்கள்,
நடைபாதைகள்,
காம்பவுண்டுச் சுவர்கள்
எல்லாம் சிமெண்டால்
கட்டப்படுகின்றன

உறுதிக்கும்
நீடித்த
உழைப்பிற்கும்
உன்னதமானது!

# செட்டிநாடு சிமெண்ட்




*தயாரிப்பாளர்கள்:*

**செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிட்.**




6. அரண்மனைக்காரன் தெரு. சென்னை-1
போன்: 27256
தந்தி: "BESTCEMENT"
தொழிற்சாலை: புலியூர் (கரூர்) திருச்சி ஜில்லா.
போன்: 144. தந்தி: "CEMENT"

**'தொடர்கதைத் திலகம்' என்ற அளவுக்குப் புகழ்பெற்ற எழுத்தாளர் ரயில்சாமி' தம் அறையில் அமர்ந்து தனியாக 'ஆடு புலி' ஆட்டம் ஆடிக்கொண் டிருக்கிறார். டெலிபோன் மணி அடிக்கிறது.**




**ரயில்சாமி** (டெலிபோனை எடுத்துக் குரலை மாற்றிக் கொண்டு): ரயில் சாமி ஐயா வீடு. யாரு பேசறது!

**போன் குரல்:** 'மலர்த் தோட்டம்' எடிட்டர் மாரிமுத்து பேசறேன்? ஐயாவோட அர்ஜெண்டாப் பேசணும்னு சொல்லு!

**ரயில்சாமி:** இருங்க பார்த்துட்டுச் சொல்றேன். (சிறிது இடைவெளி கொடுத்துக் குரலை வழக்கமான பாணியில் மாற்றி) வணக்கம் எடிட்டர் சார்! ரயில்சாமி பேசறேன்! என்ன விசேஷம்?

**போன் குரல்:** வணக்கம் சார்! வர வாரத்துக்கான தொடர்கதைப் பகுதி இன்னும் வந்து சேரலே!... ரொம்பக் காலதாமதம் ஆயிடுத்து! படம் போட்டாகணும்!...

**ரயில்சாமி:** 'மலர்த் தோட்டத்து'க்கு இப்போது நான் என்ன கதை எழுதிக்கிட்டு இருக்கேன்?

**போன் குரல்:** என்ன சார் தமாஷ் பண்றீங்க? 'பவழமல்லி'ங்கற உங்க கதைதானே பரபரப்பா போயிட்டு இருக்கு! வாசகர்கள் கிட்டே இருந்து நல்ல வரவேற்பு சார்!.... இந்த வாரம் கதாநாயகியைச் சினிமாத் தியேட்டரிலே விட்டிருக்கீங்க...

**ரயில்சாமி:** எடிட்டர் சார்!... கதாநாயகி சினிமாத் தியேட்டரிலேயிருந்து வெளியே வரணும்னு...

**போன் குரல்:** கதாநாயகன் ஊரிலே இல்லே! வில்லன்தான் ஹிப்பி வேஷத்திலே கதாநாயகியை... அப்படித்தானே கொண்டு போகப் போறீங்க.

**ரயில்சாமி:** நான் கதையைச் சொல்லல்லே. என் கண்டிஷனைச் சொல்றேன். நான் கதை எழுதற பேனாவுக்கு மை ஊற்றிக் கொடுக்க ஓர் ஆள் தேவை.

**போன் குரல்:** அடேடே! இதை அப்பவே சொல்லக் கூடாதோ? ஆபீஸிலே மூணு பையன்கள் வேலை இல்லாமல் சுத்திச் சுத்தி வர்றாங்க! இப்பவே ஒரு பையனைச் சைக்கிளில் அனுப்பி வைக்கிறேன!

**ரயில்சாமி:** சார்! அவங்களுக்கெல்லாம் என் பேனா விவகாரம் தெரியாது. அது தெரிஞ்ச பையன் இங்கே ஒருத்தன் இருக்கான். அதைக் கழுவி மை போட்டுக் கரெக்டாத் தருவி...! அதுக்கு அவன் வாரத்துக்கு எழுபத்தி ஐந்து ரூபாய் சம்பளம் கேட்கிறான். உங்க பையன்கள் உதவிக்கெல்லாம் நான் காத்துக்கிட்டிருந்தால் என் 'மூட்' கெட்டுப் போகும்! அதனாலே இந்தப் பையனை நான் வேலைக்கு அமர்த்திக்கப் போறேன்! நீங்க இனிமே எனக்குச் சன்மானம் அனுப்பறபோது இந்தப் பேனாப் பையன் சம்பளத் தொகையையும் சேர்த்துக்கணும்.

**போன் குரல்:** ரயில்சாமி சார்! உங்க வேண்டுகோள் வந்து....

**ரயில்சாமி:** ஒரு திருத்தம்! இது வேண்டுகோள் இல்லே! நிபந்தனை.

**போன் குரல்:** உங்க நிபந்தனை ரொம்ப வேடிக்கையா யிருக்கு! பத்திரிகை உலகத்திலே இந்த மாதிரி ஒரு புதுமையை யாருமே நினைத்திருப்பாங்களான்னு...

**ரயில்சாமி:** பத்திரிகை உலகத்தின் லட்சியமே புதுமையைத் தேடிப் பிடிக்கிறது தானே?... அதற்கு எழுத்தாளர்களாகிய நாங்கள் உதவறோம்!

**போன் குரல்:** ரயில்சாமி. சார்! இந்த நிபந்தனை விவகாரத்தைப் பற்றி நான் ஒன்றும் செய்வதற்கில்லே! பத்திரிகை நிர்வாக டைரக்டர்கள் யோசனை செய்ய வேண்டிய விஷயம்!

**ரயில்சாமி:** அவங்க யோசிச்சு ஒரு முடிவுக்கு வரட்டும். அதற்குப் பிறகு அடுத்த இதழுக்கான தொடர்கதைப் பகுதியை அனுப்பி வைக்கிறேன்! எடிட்டர் சார்! இன்னும் இரண்டு கண்டிஷன்களையும் கேட்டுக்குங்க! நான் தொடர்கதை எழுதும் பேப்பர்களை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்து அடுக்கிக் குண்டூசி குத்த ஓர் ஆளைப் பார்த்து வைத்திருக்கிறேன். அவன் அதிலே எக்ஸ்பர்ட்! அவனுக்கு வார ஊதியம் ஐம்பது ரூபாய்!... அந்தக் கதைப் பகுதியை வாரா வாரம் எங்க வீட்டு வேலைக்காரன் உங்க காரியாலயத்துக்குக் கொண்டு வருவான். அவன் போக வரப் பிரயாணப்படி வாராவாரம் இருபத்திஐந்து ரூபாய்! நல்லா யோசிச்சுப் பதில் சொல்லுங்க! அவசரம் ஒண்ணுமில்லே!

**போன் குரல்:** மிஸ்டர் ரயில்சாமி! இதெல்லாம் நல்லா யிருக்கா? உங்களை ஓர் எழுத்தாளர்னு அறிமுகப்படுத்தினதே எங்க 'மலர்த்

தோட்டம்'! 'உணர்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாகப் பெருக்கெடுத்து ஓட இவர் ரயில் வேக நடை உதவுகிறது' என்று ஒரு தூக்குத் தூக்கிச் சப்பை கட்டுக் கட்டி, மயில்சாமி என்கிற பேரை 'ரயில்'சாமியாக்கியதும் 'மலர்த் தோட்டம்'. அந்த மலர்த் தோட்டத்தின் மீதே மையைக் கொட்டிக் குண்டுசியாலே குத்தறீங்க! இதையெல்லாம் யோசிக்க உங்களுக்கு ஏது அவகாசம்?

**ரயில்சாமி:** கரெக்ட்! எனக்கு அவகாசம் இல்லைதான்! எத்தனை பத்திரிகைக்காரங்க க்யூவிலே நின்னுக்கிட்டுத் தொடர் கதை கேட்கிறாங்க! ... எடிட்டர் சார்! நீங்க ஆரம்ப காலத்திலே ஏதோ 'ஹெல்ப்' பண்ணினீங்க என்பதற்காக உங்களுக்கு அடிமையாகவே இருந்துட முடியுமா? எனக்கு இப்போ அந்தஸ்து வந்தாச்சே!

**போன் குரல்:** மயில்சாமி! இப்போ உங்க பேரு திறமையின் அடிப்படையிலே நிக்கலே புகழின் அடிப்படையிலே நிக்குது! அதைப் புரிஞ்சுக்கிட்டீங்களா?

**ரயில்சாமி:** நல்லாத் தெரியும்! ஆனால் ஒப்புக்குவேனா! நான் எதைக் கிறுக்கினாலும் ஓஹோங்கிறாங்களே!

**போன் குரல்:** இந்த வயிற்றெரிச்சலை என் வாசகர்களுக்குத் தெரிவிக்க முடியுமா?.... எல்லா நிபந்தனைகளையும் ஒப்புக் கொண்டு தொலைக்கிறேன்! தொடர்கதைப் பகுதியை அனுப்பித் தொலையும்!

**ரயில்சாமி:** வேலைக்காரன் கொண்டு வந்துக்கிட்டே இருக்கான்!

(டெலிபோனை வைத்துவிட்டு மீண்டும் போய் ஆடு புலி ஆட்டத்தில் ஈடுபடுகிறார்.)

**சினிமாத் துறையில் பிரபலமான சில நடிக, நடிகைகள், விதம்விதமான சலுகைகள் கேட்கிறார்கள், நிபந்தனைகள் போடுகிறார்கள் என்று பட அதிபதிகள் குறைப்பட்டுக் கொண்டதைப் பத்திரிகைகளில் படித்துவிட்டுத் தூங்கிய 'மேனா' கண்ட கனவு.**

---




## 'ஹிஜாக்கிங்' என்றால் என்ன?

அமெரிக்காவில் அரிஜோனாவில் உள்ள ஆர்தர் என்பவர் வருமானவரி வழக்கில் தோற்றுப் போனார். 471 டாலர் அபராதம் கட்டினார். இதனால் அரசாங்கத்தின்மீது கோபம் கொண்ட இவர் ஒரு நாள் வாஷிங்டன் செல்லும் விமானத்தில் (ஃப்ளைட் 486) ஏறினார். விமானம் பறக்க ஆரம்பித்ததும் நேராக 'காக்பிட்டு'க்குச் சென்று ஒரு துப்பாக்கியை விமான ஓட்டியின் முகத்துக்கு நேராகக் காட்டி 'அடுத்த ஸ்டாப் செயிண்ட் லூயிஸில் இறங்காமல் நேராக வாஷிங்டனுக்கு ஓட்டு' என்றார். இரண்டாவது பைலட் விஷயத்தை வாஷிங்டனுக்கு ரேடியோ செய்தார். செயிண்ட் லூயிஸில் பனிமூட்டமாக இருப்பதால் இறங்க முடியவில்லை என்று பிரயாணிகளிடம் (51 பேர்) சொல்லப்பட்டது. அவர்கள் நம்பிவிட்டார்கள். ஆர்தர் என்ன கேட்டார்? நூறு மில்லியன் டாலர் எனக்குப் பணமாக வாஷிங்டன் விமான நிலையத்தில் கொடுக்கப்பட வேண்டும் என்றார். இந்தச் செய்தியும் வாஷிங்டனுக்குத் தெரிவிக்கப்பட்டது. பணம் தயார் என்ற செய்தி வந்ததும் விமானம் இறங்கலாம் என்று அனுமதி அளித்தார்.

விமானம் இறங்கியதும் ஒரு விமான நிலைய அதிகாரி கையில் ஒரு பெரிய பையுடன் ஓடி வந்தார். பையை உள்ளே கொடுத்தார். பை நிறைய டாலர் நோட்டுக்கள். எண்ணிப் பார்த்தார், ஆர்தர். நூறாயிரம் டாலர்தான் இருந்தது. விமான நிலையத்துக்கு அருகிலுள்ள பாங்கிலிருந்து' அவ்வளவு பணம்தான் 'வாங்க முடிந்ததாம். ஆர்தருக்குக் கோபம். துப்பாக்கியை நீட்டி



விமானத்தை மறுபடியும் பறக்கச் சொன்னார். விமானம் பறந்தது. இதற்குள் பிரயாணிகளுக்குத் தெரிந்துவிட்டது நடந்த விவரம் முழுதும். அவர்கள் கலவரப்படவில்லை. அடுத்த ஸ்டாப் எது? மாண்ட்ரீயலா அல்லது ஹவானாவா? என்று கேலி செய்ய ஆரம்பித்தார்கள். பைலட்டுக்குக் கலவரம் அடங்கவில்லை. பணத்தைக் கொடுக்காவிட்டால் வந்திருந்த ஆசாமி தாறுமாறாகச் சுட்டுத் தன்னையும் அழித்துக் கொண்டு விமானத்தையும் விபத்துக்குள்ளாக்கி விடுவானே! திரும்பவும் வாஷிங்டன் விமான நிலையத்துக்கு ரேடியோச் செய்தி அனுப்பினார். 'பணம் தயார்' என்று பதில் வந்தது. கீழே பணத்துக்கு என்ன செய்தார்கள்? பழைய செய்தித் தாளைப் பையில் போட்டுக் கட்டி விமானம் இறங்கும் பாதைக்கு அருகே வரிசையாக வைத்திருந்தார்கள். விமானம் இறங்கும் சமயம் சத்தமில்லாமல் அதன் இரு பக்க டயர்களும் சுடப்பட்டுப் பஞ்சர் ஆக்கப்பட்டன. விமானம் இறங்கியவுடனேயே பிரயாணிகள் ஆபத்துக் காலத்தில் மட்டுமே திறக்கப்படும் கதவுகள் வழியாக வெளியே ஓடி வந்துவிட்டார்கள். கீழே இருந்தபடியே ஓர் அதிகாரி துப்பாக்கியை விமான ஓட்டியின் கையில் தூக்கி எறிந்தார். இதைப் பார்த்த ஆர்தர் சுட ஆரம்பித்துவிட்டார். இதற்குள் இரண்டு எஃப். பி. ஐ. அதிகாரிகள் விமானத்துக்குள் ஏறிவிட்டனர். பைலட் குறி தவறாமல் சுட்டு ஆர்தரைக் காயப்படுத்தினார். பிறகு அவரது காலைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளினார். அதிகாரிகள் ஆர்தரைக் கைது செய்தனர். டைம் - 'பாலி'

# களைப்பா?

# க்ளாக்ஸோஸ்-D

## நிமிட நேரத்தில் சக்தி தரும்




dCA/GL/10 Tam

# மனமகிழும் காலைப் புத்துணர்வு மணிக்கணக்கில் நிலைத்திருக்க...

குளித்த பிறகு பாண்ட்ஸ்
ட்ரீம்ஃப்ளவர் டால்க்!
பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர்
டால்க்கின் நீங்காத
நறுமணம்...ஈரத்தை இழுக்கும்
தன்மை...நாள் முழுவதும்
காலைப் புத்துணர்வின் சுகம்.
இவை யாவரையும் உங்களிடம்
ஈர்க்கும்.

கோடையானாலும் இறுக்க
மானாலும் நறுமணத்துடன்
புதுமைப் பொலிவில், குளுமை
உணர்வில் உங்களை திகழ
வைக்கும். எக்காலத்துக்கும்
ஏற்ற பாண்ட்ஸ்
ட்ரீம்ஃப்ளவர் டால்க்.
இந்தியாவிலேயே அதிக
விற்பனையாகும் டால்க்.

மூன்று அளவுகளில்
கிடைக்கிறது.
ஃபாமிலி, பெரியது,
மத்திமம்.




## பாண்ட்ஸ்

***ட்ரீம்ஃப்ளவர் டால்க்***

சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்
*சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடட்*
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில்
இணைக்கப்பட்டது)

# அடையாளங்கள்



நான் ரகுராமன் இல்லே. சீதாராமன்.

நம்புங்கோ! மயிலாப்பூர் கபாலீசுவரர் தெப்பக்குளத்தண்டை மேற்கு முகமா, குளத்தை எட்டிப் பார்க்கிற மாதிரி கூழையா நின்னிண்டிருக்கு பாருங்கோ, ரெண்டு தென்னே மரம். அதுக்கு நடுவாலே எங்க 'ஆம்' இருக்கு.

அதுதான் எங்க 'ஆம்'. நீங்க சொல்றமாதிரி மிதிலேப்பட்டி அக்ரஹாரத்திலே எங்க 'ஆம்' இல்லே.

என்ன சொல்றேன்? எங்கப்பா பேர் நீலகண்டய்யரா? என்ன பேத்தறேள்? எங்கப்பா பேர் வெங்கடராம சாஸ்திரின்னு?

என்னேத்தான் மாத்தப் பார்க்கிறேள். எங்கப்பா என்ன பாவம் செய்தார்? என்னைப் பெத்த பாவத்தைத் தவிர வேறு பாவத்தைச் செய்தறியாத அப்பாவி மனுஷர் அவர்! அவர் பெயரை ஏன் மாத்தறேள்?

காய்ந்த கஞ்சி வடாம் கம்பி போலே நிக்கறாரே அந்த நாமக்காரப் போலீஸ்காரர், அவர் தம் கையிலே வெச்சிண்டிருந்த லாத்திக் கம்பாலே என் விலாவிலே குத்தறார். ''ஐயரே! பேசாமே நிக்கமாட்டே?'' ன்னு பூனே மாதிரி உறுமறார்.

அந்த நாமக்காரரிடத்திலே உருப்படியா இருந்தது ரெண்டு கண்ணு மட்டும்தான்; அந்த உருவத்துக்குக் கொஞ்சம் கூட ஒட்டாத மாதிரி, ஏதோ ஒரு பூதத்திடத்திலே இருந்து அந்தக்

**வாசவன்**

கண்ணைப் பிடுங்கி எடுத்து, அவர் மூகத்திலே ஒட்டி வச்ச மாதிரி அப்படி ஒரு வித்தியாசமா, நெஞ்சைக் கலக்கிறதா இருந்தது.

''பாருங்கோளேன்! நான் பொறந்து, வளர்ந்து பொட்டலாப் போனது எல்லாமே சென்னை மயிலாப்பூரிலேதான்! இந்தப் போலீஸ்காரா ராமநாதபுரம் ஜில்லாவிலே இருக்கிற மிதிலைப்பட்டிதான் என் சொந்த ஊர்னு சொல்றா. எனக்கு நாற்பத்தி மூணு வயதாறது. இத்தனை காலமா எனக்குச் சீதாராமன்னுதான் பேர். இப்போ இவா சொல்றா 'உன் பேர் சீதாராமன் இல்லே. ரகுராமன்னு. எங்கப்பாவின் பேர் நீலகண்டய்யராம்! என்னய்யா அக்கிரமம்? அப்பன் பேரென்ன அரசியல் கட்சியா, கண்ட கண்ட நேரத்திலே மாத்திக்கிறதற்கு!

வைதிகாள் வட்டாரத்திலே வேங்கடராம சாஸ்திரின்னு வெகு பிராபல்யம். சாஸ்திரம் வேறே, சம்பிரதாயம் வேறேன்னு வருமான வரிக்குக் காட்டறதுக்கு ஒண்ணு, பூட்டறதுக்கு ஒண்ணுன்னு ரெண்டு கணக்கு எழுதறுளே, அது மாதிரி ரெட்டை வாழ்க்கை வாழ்ந்தவர் இல்லே அவர். உள்ளும் புறமுமா ஒரே வாழ்க்கை வாழ்ந்தவர் அவர். ஹரிக்கேன் லேட்டைப் பார்த்திருக்கேளா? அது அதுக்காகவா எரியறது? மற்றவாளுக்காக எரியறது. அப்படி எரியறதாலே என்ன ஆறது? கண்ணாடியிலே புகை பிடிச்சுப் போயிடறது. லோகத்திலே ரொம்பப் பேர் மற்றவா மெச்சிக்கிறதுக்காகத்தான் வாழறு. மற்றவா மெச்சிக்கணுமேங்கற அவஸ்தையே புகையா மண்டிப் போய் அவாளை மறைச்சுடறது. பாருங்கோளேன் அவஸ்தையை! வெளிச்சம் போடப் போய்ப் புகை மூடிப் போறு. எங்கப்பா — அதான் வேங்கடராம சாஸ்திரி வெளிச்சம் போடறவர் இல்லே. ஒரு சூரியன் மாதிரி, ஒரு சந்திரன் மாதிரி தகதகன்னு கம்பீரமா வாழ்ந்தார்.

அவரோட சீமந்தப் புத்திரன் நான். என்னைப் போய் எதுக்காக நீலகண்டய்யர் பிள்ளைங்கறு இந்தப் போலீஸ்காரா?

''ஓய் ரகுராமன்!''னு குலமங்கலத்தார் பாணியிலே குழைவும், அதட்டலுமா குரலை நீட்டறுர் சப் - இன்ஸ்பெக்டர்.

''இதோ பாருங்கோ... ஆயிரம் தடவை சொல்லிட்டேன். நான் ரகுராமன் இல்லே. சீதாராமன். கல்லிலே விழுந்தாத்தான் நாணயம் சத்தம் கேட்கும். சாக்கடையிலே விழுந்தாச் சத்தம் கேக்காதுதான்.''

''இந்தப் பல்லவியை நிறுத்தப் போறீரா இல்லையா?'' என் பக்கத்தில் நின்னுண்டிருந்த ஏட்டு என்னைப் பார்த்து அதட்டிஞர்.

''இந்த ஆள் ஏமாத்தறுன் சார்! இவன் தான் ரகுராமன். இவன்தான் அந்தக் குழந்தையின் டாலர் சங்கிலியைப் பறித்துக் கொண்டு ஓடியவன். இவன் பொய் சொல்றுன். இவனுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்தா, உண்மையைக் கக்கிடுவான் சார்!''னு அந்த நாமக்காரர் படபடக்கிறுர்.

சப் இன்ஸ்பெக்டர் சின்னப் பையன்மாதிரி தான் இருந்தார். ஆனு போலீஸ் உத்தியோகத்துக்குத் தேவையான அத்தனை அங்க லட்சணங்களோடே, இருந்தார்.

அந்தப் பிள்ளையாண்டான், என் மூகம், உடம்பை எல்லாம் ஊடுருவிண்டு போய் என் மனசைத் துழாவற மாதிரி குறுகுறுன்னு பார்த்த பிறகு சோப்பின் வாடையே படாமே நீர்க்காவி ஏறின என் வேஷ்டி, அங்கவஸ்திரம்கற பேரிலே என் தோளிலே வழிஞ்சிண்டிருந்த ஒரு கிழிசல் துணி, கறுப்பும் வெளுப்புமா யிருந்த என் தாடி, கிரகணத்திலே மாட்டிண்ட சந்திரனைப் போல, தாடிக்குள்ளே மறைஞ்சு போனது போக மிச்சம் இருந்த என் மூகம், கண், நெத்தின்னு ஒண்ணு பாக்கி விடாமே பார்த்துண்டே இருந்தார். பூமிக்குள்ளே ஒளிஞ்சிண்டிருக்கிற வைரத்தைத் தோண்டி எடுக்கிற மாதிரி, அபவாதத்திலே மூச்சு முட்ட நின்னுண்டிருந்த என்னை அடையாளம் புரிஞ்சுக்கிறதுக்காகத்தான் அவர் அப்படிப் பார்த்தாரோ என்னவோ?

அந்தக் குழந்தை மூக்கைத் தேச்சு விட்டுண்டு, ''நீங்க ரகுராமன் இல்லையா?''ன்னு கேட்கறது. அந்தக் கேள்வியிலே வித்தியாசம் புரியறது. இதுக்கு முன்னுல்வரை என்னை ஒரு குற்றவாளின்னு நெனைச்சு நான் சொல்ற உண்மையைக் கூட நம்பத் தயங்கிண்டிருந்தார் அவர். இப்போ நான் பொய் சொன்னுல்கூட நம்பத் தயாரா யிருக்கார் அவர்.

நான் அப்போதும் இப்போதும் ஒண்ணு தான். அவர்தான் அப்போது ஒண்ணுவும், இப்போது ஒண்ணுவும் இருக்கார். குழந்தையோல்லியோ?

''சொல்லுங்க. நீங்க ரகுராமன் இல்லையா?'' மறுபடியும் கேட்கிறுர்.

''இல்லே''ங்கறேன் நான்.

''அவன் பொய் சொல்றுன் சார்!''னு கூட்டுக் கத்தாய்க் கத்துகிறுர் அந்த நாமக்காரர்.

''நான் விசாரணை நடத்துகிறேன். தெரிகிறதா?''ன்னு சாட்டை வீசற மாதிரி குரலை வீசிஞர் அவர்.

அவ்வளவுதான்! நாமக்காரர் சர்வாங்கமும் ஒடுங்கிப் போயிட்டார்.

''நீங்க ரகுராமன் இல்லே! நீலகண்டய்யர் பிள்ளையும் இல்லே? அப்படித்தானு?''ன்னு என்னைக் கேட்டுண்டே எதிரே இருந்த புகார் மனுவைக் கூர்ந்து பார்த்தார் சப் - இன்ஸ்பெக்டர்.

''ஆமா. நான் இரண்டும் இல்லே. நான் சீதாராமன். நான் மிதிலைப்பட்டி இல்லே. மெட்ராஸ்!...''

''நீங்க மெட்ராஸிலே இருந்து மிதிலைப்பட்டிக்கு எதுக்காக வந்தீங்க?''ன்னு கேட்டார் அவர்.

''ஏன் வரப்படாதா? மெட்ராஸிலே இருந்து வர்ரவாளை யெல்லாம் இப்படித்தான் திருட்டுப் பட்டம் கட்டுவேளோ? ஓடற ஜலத்தைப் பார்த்து, 'நீ எங்கே போறே? எங்கே வர்றே'ன்னு கேட்க முடியுமா? இல்லே, அதைத்தான் உங்க மாதிரி கைது செய்து கொட்டடியிலே அடைச்சு வைக்க முடியுமா? யாராவது என்னைப் போல உள்ளவாளைப் பிடிச்சு மிரட்டுவேள். நீங்க ஒரு கேள்வியைக் கேட்டேள். நான் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அதுக்கும் பதில் சொல்லியாக

றும்: என்னைக் காப்பாத்திக்கிறதுக்கு ஒரு வீடு போதலே. ஓர் ஊர் போதலே. அதனாலே தான் ஊர் ஊரா ஓடிண்டிருக்கேன். நான் மிதிலைப்பட்டிக்கு வரக் காரணமும் இல்லே காரியமும் இல்லே. என் முடிவில்லாத பிர யாணத்திலே ஒவ்வொரு ஊரும் கடுகு மாதிரி தேஞ்சு என் பின்னாலே போயிடும். ஆனால் இந்த மிதிலைப்பட்டி கடுகு இல்லே. கடுகுப் பாறை. அது என்னை மேலே போக விடாமே உங்களண்டே என்னை ஒரு திருடனாகக் கொண்டு வந்து நிறுத்தி யிருக்கு. ஜெயிலுக் குப் போக நான் தயங்கல்லே. ஏன்னு லோகமே ஒரு ஜெயில்தான். பிறந்தவா ஒவ்வொருத்தரும் கைதிதான். என்னை ஜெயி லிலே புடிச்சுப் போடுங்கோ. ஆனா 'ரகு ராமன்'னு எனக்கு ஒரு புதுப் பெயரைச் சூட்டி ஜெயிலிலே போடாதீங்கோ. 'சீதா ராமன்'கிற என் பெயர், என்னை உலகத்துக் குக் காட்டிக்கிற அடையாளம். என்னை அடையாளத்தோடே, 'சீதாராமன்'கிற பேரோடே பிடிச்சுப் போடுங்கோ...''

பேச்சை நிறுத்திண்டு சப் இன்ஸ்பெக் டரைப் பார்த்தேன். அவர் முகத்திலே வியர்வை பொங்கி வழியறது.

திடீர்னு, ''உட்காருங்கள்'' என்கிறார், அவர்.

''இல்லே. நான் நிற்கறேன். நான் குற்ற வாளியா நிறுத்தப்பட்டிருக்கிறவன்...''

''குற்றவாளிகளெல்லாம் உட்காரக்கூடா துன்னு, உலகத்திலே முக்கால்வாசிப் பேர் நின்னுகொண்டேதான் இருக்கணும்!'' என் றார் அவர்.

''நான் முக்கால்வாசிப் பேரிலே ஒருத்தனுத் தான் ஆக்கப்பட்டிருக்கேன். பரவாயில்லே. நான் நிற்கறேன்... என்னை 'உட்கார்'னு நீங்க சொன்னதாக நான் நினைக்கலே. அப்படி நீங்க சொல்றதா இருந்தா ஆரம்பத்திலேயே சொல்லியிருப்பேன். நான் சொன்ன வார்த் தைகள் ஒவ்வொண்ணும் என் ஆத்மாவின் நெருப்பிலேருந்து விழுந்த அனல் துண்டு. அது உங்களைச் சுட்டிருக்கும். அதுக்குப் பின் னாலே, சுட்ட புண்ணுக்கு மருந்து போடற மாதிரி என்னை உட்காரச் சொல்றேள். நெருப் பிலேயும் கடாது பாருங்கோ அந்த நெருப்பு இருக்கிற இடம்தான் இந்தச் சீதா ராமன் இருக்கிற இடம். இதை நம்பறேளா?'' என்று கேட்டேன்.

''நம்புகிறேன். உங்களை நம்புகிறேன். உங் களைச் சீதாராமன்னு நிச்சயமா நம்புகிறேன். ஆனா இதிலே என்னுடைய நம்பிக்கை முக் கியம் இல்லை. நான் ஒரு போலீஸ்காரன். ஒரு போலீஸ்காரனுக்கு முக்கியமாகக் கற்றுக் கொடுக்கிற பாடம், அவன் யாரையும் நம்பக் கூடாது என்பது. எல்லோரையும் சந்தேகிப் பதற்காகவே எங்களைப் பழக்கி விட்டிருக் காங்க. மனித சுபாவம் எங்களைப் பொறுத்த வரையிலே தடை செய்யப்பட்டிருக்கு. என் னுடைய மனித சுபாவம் உங்களைப் பொறுத்த வரையிலே 'சீதாராமன்'னு நம்பத் தயாராக இருக்கு. 'அப்படி நம்பாதே'ன்னு என்னு டைய உத்தியோக தர்மம் எனக்குத் தடை போடுகிறது. நீங்கள் சீதாராமனாக இருந் தாலும் அந்தக் குழந்தையின் சங்கிலியைத் திருடிய ரகுராமனைப் போலவே இருக்கிறீங்க. அதுதான் நாங்கள் உங்களைப் பிடிக்கக் கார ணம். நீங்கள் சீதாராமனாகவே இருந்தாலும் கூட, நீங்கள் ஏன் ரகுராமனாக இருக்கக் கூடாது என்று சந்தேகப்பட வேண்டியது தான் எங்கள் தொழில் தர்மம். உண்மையி லேயே ரகுராமன் என்பவன் வேறொருவனாக இருந்து, அவன் எங்கள் கையில் பிடிபடுகிற வரையில் நீங்கள்தான் எங்களுக்கு ரகுராமன். நீங்கள்தான் அந்தக் குழந்தையின் சங்கிலி யைத் திருடியவர்!....'' அப்படீன்னு கூறிண்டு துரியோதனனுக்குச் செஞ்சோற்றுக் கடனைக் கழிச்ச கர்ணனைப்போல் மனசுக்கும் போட்டிண்டிருக்கிற தொப்பிக்கும் மாறி மாறிப் பதில் சொல்ற தவிப்பு பெருமூச்சாய் மோதிண்டு வர, என்னைப் பார்த்தார்.

''உங்களைப் பார்த்தா எனக்குப் பாவமா இருக்கு சார்! உங்கள் தொழிலுக்குன்னு ஒரு தர்மம் இருக்கிற மாதிரி உங்களுக்குன்னு ஒரு தர்மம் இருக்கு. இரண்டு தர்மங்களும் ஓரோர் சமயத்திலே கண்டைக் கடா மாதிரி முட்டிண்டு மோதறப்போ, நீங்க கலகலத்துப் போறேள். மனசை விடுங்கோ. தொப்பியைக்



''தலைவர்களெல்லாம் எதற்காக இப்படிக் கியூவில் நிற்கிறாங்க?''

''அந்தக் காந்தி சிலையை ஒருவர் மாற்றி ஒருவராய்த் திறந்து வைக்கிறதுக்கு!''

கவனியுங்கோ... சார்! நீங்க உங்க தொழில் தர்மப்படி என்னை ரகுராமன்னு சாதிக்கிறதா இருந்தா, நானும் என்னைச் சீதாராமன்னு சாதிச்சே ஆகணும். அதுக்குக் காரணம் நான் சீதாராமனா இருக்கிறதுதான்! நான் ஜெயிலுக்குப்போகணும்னு பேஷாப் போறேன். ஆனா 'ரகுராமன்' என்கிற பெயரோடு போக மாட்டேன். 'சீதாராமன்' என்கிற பெயரோடுதான் போவேன்''னு அழுத்தமா, இந்த லோகத்திலே இதைவிட இன்னொன்னு அழுத்தம் இல்லேங்கற பிரக்ஞையால உறுதியோடே சொன்னேன் நான்.

''இந்தக் கேஸிலே சீதாராமனை நாங்க ஜெயிலுக்கு அனுப்ப முடியாது. இதிலே குற்றவாளி ரகுராமன்தான். உங்களைப் பொறுத்த வரையிலே நீங்கதான் ரகுராமன் என்கிறதுக்குப் பல சாட்சிகள் இருக்கு. சங்கிலியைப் பறி கொடுத்த குழந்தையைப் பெற்றவர், அந்தக் குழந்தை ரகுராமனுடைய சிநேகிதன் பாச்சா எல்லோருமே நீங்கதான் ரகுராமன்னு சொல்லிட்டாங்க. நீங்களோ உங்களைச் சீதாராமன்னு சொல்றீங்க. நீங்க சொல்றது எங்களுக்கு முக்கியம் இல்லே. சாட்சிகள் சொல்றதுதான் முக்கியம். உண்மைகளைக் கண்டு பிடிக்க நாங்கள் சாட்சிகளையே நம்புகிறோம்!''

''ஆச்சரியப்படறேன்!''னு சொன்னேன், நான்.

''ஏன்?''

''ரகுராமனோடே சிநேகிதன் பாச்சாகூட என்னை ரகுராமன்னு சொல்றதுதான் ஆச்சரியம். நெருங்கிப் பழகிய சிநேகிதனாலேகூட ரகுராமனுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டுபிடிக்க முடியலேன்னா, எங்க ரெண்டு பேர் உருவத்திலே ஓர் அபூர்வமான ஒற்றுமை இருக்கணும். சினிமாவிலே இப்படி அதிசயமெல்லாம் வருமாம்! நான் சினிமாவைக் கண்ணாலே கூடப் பார்த்ததில்லே. ஆனா இப்போ நான் ஒரு சினிமாக் கதாநாயகனா உங்க முன்னாலே நின்னிண்டிருக்கேன். நீங்க, உங்க சாட்சிகள் எல்லோருமே எனக்கு ரகுராமன் வேஷம் கட்டறேள். அதை நான் மறுக்கறேன். நான் சீதாராமன்தான். என்னைப் புரிஞ்சு கொள்ளக் கூடிய ஒரே ஒரு சாட்சி இருக்கு!''

''யார் அந்தச் சாட்சி?''ன்னு கேட்டிண்டு, முகமெல்லாம் ஆவல் பூக்க நிமிர்ந்து உட்கார்ந்தார் சப்-இன்ஸ்பெக்டர்.

''ரகுராமனோடே தாயார்தான் அந்தச் சாட்சி! ரகுராமன் யார், நான் யார்ங்கறதைப் புரிஞ்சுகொள்ள முடியாத பாச்சா இல்லே அவ. காக்கைகளைப் பார்த்தேளா? எல்லாம் ஒரே மாதிரி கறுப்பாத்தான் இருக்கு. நமக்குத்தான் அப்படி. அந்தக் காக்கைகளுக்குள்ளே வித்தியாசம் புரிஞ்சுதான் இருக்கு. ஆயிரம் குஞ்சுகளுக்கு மத்தியிலேயும் தன் குஞ்சைப் புரிஞ்சுக்கறதுக்குத் தாய்க் காக்கை திணறுகிறதில்லே. அதே மாதிரி ரகுராமன் நான் இல்லேன்னு அந்தத் தாய் ஒரு க்ஷணத்திலே கண்டு பிடிச்சுடுவா. ஏன்னு ரகுராமன் அவளோடே அடையாளம், அவளோடே முத்திரை. கிளம்புங்கோ அவா ஆத்துக்கு. நான் யாருங்கறது புரிஞ்சு போயிடும்!''

சப் இன்ஸ்பெக்டர் பசக்குன்னு எழுந்து நின்னுட்டார். நான் எப்படியாவது ரகுராமன் இல்லேங்கறது நிரூபணமாயிடணும்னு என்னைவிட அதிகமாக அவர் விரும்புகிறார்னு நான் புரிஞ்சுண்டேன். அந்த நாமக்காரரைத் திரும்பிப் பார்த்தார். ''2411 உனக்கு ரகுராமன் வீடு தெரியும் இல்லையா?'' என்று கேட்டார்.

''தெரியும்''னார் அவர்.

''கிளம்புங்கள் போகலாம்!''னு என்னண்டை சொன்னார்.

கொஞ்சமும் தாமதிக்கலே. நான், அவர், அந்த நாமக்காரர் மூணு பேரும் ரகுராமனோடே 'ஆமை' நோக்கிக் கிளம்பினோம்.

ஒரு காலத்தில் நன்னா வாழ்ந்தவா போலே இருக்கு. ரகுராமன் 'ஆம்' அத்தனை பெரிசா இருந்தது. மாடிக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லே. ஆனா மாடி எந்த நேரத்திலும் விழுந்துடற மாதிரி தள்ளாடிண்டு இருக்கு.

நாங்க மூணு பேரும் வாசல்லே நின்னு உள்ளே பார்த்தோம். கொல்லைக் கதவு கண்ணுக்குத் தெரியலே. அவ்வளவு நீளமா காரைக் கட்டிடம். அங்கங்கே விரிசல், தரை எல்லாம் பொங்கிக் கிளம்பி ஒரே வெடிப்பு.

சப் இன்ஸ்பெக்டர் பூட்ஸ் காலோடே உள்ளே நுழையப் பார்த்தார்

''மன்னிக்கணும்''னேன் நான்.

''ஏன்?''னு கேட்டுண்டே என்னைப் பார்த்தார் அவர்.

''இப்போ இங்கே ஆசாரம் இருக்கோ இல்லியோ, ஒரு காலத்திலே இருந்திருக்கு. வீடுன்னு வெறும் செங்கல்லும் கண்ணாம்பும் இல்லியே? அந்த வீட்டிலே வாழற குடும்பத்தோட வாழ்க்கையைச் சொல்ற வரலாறுன்னா அது? நீங்க பூட்ஸ்

மத்தியப் பிரதேசத்தில் உள்ள ராய்ப்பூரில் மகாத்மா காந்தியின் ஒரே சிலையை இரண்டு முறை திறந்து வைத்திருக்கிறார்கள். ஒரு முறை எஸ். எஸ். பி. தலைவர் திறந்தார். மறு முறை இந்திரா காங்கிரஸ் தலைவர் திறந்தார்.

'70 ஜூலையில் வந்த ஒரு செய்தி

தகவல்: 'பாலி'

# பாரீர்! வளமூட்டப்பட்ட புதிய அஸ்ட்ரா! நீங்கள் கோரியவற்றை எல்லாம் கொண்டுவருகிறது --ஏன், அதற்கும் மேலாக!




**இதோ நீங்கள் கோரியவை:**
கூடுதலான மால்ட் சுவை வளம் --அடடா, அதன் இனிப்பே இனிப்பு!

**இதோ, அதற்கும் மேலாக:**
வற்றாத சக்தியை வழங்குவதற்கென லைசின், தயமின் சத்துக்கள் சேர்க்கப்பட்டுள்ளது!

எந்நேரமும் வற்றாத தெம்புடன் இன்பம் சுவைத்திட இன்றே பருகுவீர் வளமூட்டப்பட்ட புதிய அஸ்ட்ரா!
இன்று அஸ்ட்ராவிலே இருப்பதென்ன? மற்றெந்த ஆரோக்கிய பானத்திலும் இல்லாத 2 சிறப்புச் சத்துக்கள்: புரத வலிமைக்கான லைசின்; தெம்பு தூண்டுவதற்கான தயமின். எனவே நீங்கள் பெறுவது மேல்மட்டமான சக்தி அல்ல, வேரூன்றிய வலிமை, ஊற்றெடுக்கும் ஆற்றல், உள்ளூரமான சக்தி!
இனிமை செறிந்தது அஸ்ட்ரா--இனிக்க இனிக்கப் பருகுவீர் ஏற்றமிகு, புதிய மால்ட் நயம். ஏற்கனவே பால் அடங்கியுள்ளதால், நீரில் கலந்தாலே போதும். ஆரோக்கியம் ததும்பும் பானம் ஆயத்தம்! எளிதில் ஜீரணிக்கத் தக்கது ஆதலால் உடம்பில் சேர்த்துக்கொள்ளப் படும். புதிய அஸ்ட்ரா--மும்முரமான உணவியல் ஆராய்ச்சியின் பயனாக, உங்களுக்கென்றே இந்துஸ்தான் லீவர் படைத்திடும் பானம்.



**இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.**

லின்டாஸ்–AST. 8-140 TM

காலோடே...ஏன் சிரமப்படறேன். ரகுராமனோட தாயாரை நானே இங்கே அழைச்சிண்டு வர்றேன். விசாரிக்கக்கோங்கோ!''

''சார்! இவரைத் தனியே அனுப்பக் கூடாது சார்! அப்படியே கொல்லை வழியே கம்பி நீட்டி விட்டார்னு...ன்னு நீட்டினார் நாமக்காரர். அவர் என்ன செய்வார்? பிறத்தியாரைச் சந்தேகப் படறதுக்குன்னே பயிற்சி பெற்றவர். ஆனா அவர் முன்னேக்கு இப்போ எவ்வளவோ தேவலே. அவர் முன்னே என்னை 'அவன், இவன்'னார். இப்போ 'அவர், இவர்' என்கிறார்!''

''எல்லாம் எனக்குத் தெரியும். யாரையும் சந்தேகிப்பதற்குச் சர்க்கார் நமக்குச் சம்பளம் கொடுக்குது. நீ நம்முடைய சர்க்காருக்குச் சேவை செய்தது போதும். கொஞ்சம் பேசாமல் இரு. சார்! நீங்க உள்ளே போய் ரகுராமன் தாயாரை அழைச்சிண்டு வாங்கோ!'' என்றார் சப்—இன்ஸ்பெக்டர்.

நான் உள்ளே நுழைஞ்சேன்.

கூடம். அடுத்துக் கூடம். ரெண்டு கூடம் அடுத்தடுத்து இருக்கும் வீட்டை இதுவரை நான் பார்த்ததில்லே. அடுத்தாப்பலே ஒரு பெரிய உள் முற்றம். வராந்தா. அதையொட்டி நான்கு பக்கங்களிலேயும் இருபது முப்பதுக்குக் குறையாத அறைகள். அதுக்கப்புறம் ஒரு கூடம். அதுக்கப்புறம் ஒரு அறை வரிசை. வீடு அனுமார் வால் மாதிரிப் போயிண்டே இருக்கு.

இங்கே யாரும் இருக்காளா இல்லியா?

காதும், கண்ணும் வலிக்கத் தேடினேன்.

யாரோ குடுகுடுன்னு கதவுப் பக்கம் ஓடற மாதிரி சத்தம் கேக்கறது. கதவு நாதாங்கி கலகலன்னு குலுங்கறது.

யாரவன்? எதுக்காக ஓடறான்?

நான் ஒரு போலீஸ்காரர் வேலையைச் செய்ய ஆரம்பித்தேன். ஓசைப் படாமல் கதவுப் பக்கமாகப் போனேன்.

கதவுக்கும் சுவருக்கும் இருந்த கையகல இடுக்கிலே ஒருவன் நின்னுண்டிருந்தான். என்னைக் கண்டதும் அவன் புறாக் குஞ்சு போலே பசக் பசக்குன்னு முழிச்சான்.

அவனை நான் பார்த்தேன். அதற்கப்புறம், அதுக்கப்புறம்.... பார்க்க வேறொண்ணும் இல்லேங்கற மாதிரி அவனைப் பார்த்துண்டே இருந்தேன்.

அவன் வேறு யாரும் இல்லே; நான்தான். அவன்! அவன்தான் நான்!

அவன் அசல் என் பிரதிபிம்பம்.

அவனுக்கு என் வயசு, என் முகம், என் கண்கள், என் தாடி, என் வேஷ்டி... அட ஈசுவரா, கிழிசல் அங்கவஸ்திரம் கூடவா என்னைப் போலப் போட்டிண்டிருக்கணும்?

அவனைப் பார்த்து நான் அசந்து போய் நிற்கையிலே அவன் அந்த ஸ்தம்பித சூனியத்தைக் கருவியா வைச்சிண்டு ஓடறதுக்கு வழி பார்த்துக் காலைத் தூக்கினான்.

விடுவேனா நான்? அவன் தோளை இறுகப் பிடிச்சிண்டேன். அவன் கோழிக் குஞ்சு மாதிரி முனகிண்டு என்னைப் பார்த்தான்.

''நீதான் ரகுராமனா?''ன்னு கேட்டேன்.

''ஆமாம்''ன்னு தலையசைச்சான் அவன்.

''நீதான் அந்தக் குழந்தையோடே சங்கிலியைத் திருடினியா?''

''அவன் பதில் சொல்லாமே முழிச்சான்.

''சொல்லுடா, சண்டாளா!''ன்னு அதட்டினேன்.

''ஆமா...''

''ஏன் திருடினே?...''

''பிறகு வேறே வழி?... எல்லாமே போயிடுத்து. அதுவாப் போகலே. நான்தான் போக்கினேன். அம்மா படுத்த படுக்கையா விழுந்துட்டா. ஏதாவது வைத்தியம் செய்யணுமே! அதுக்குப் பணம் வேணுமே! கேட்கக் கூடியவா, கேட்கக் கூடாதவா யாரையும் பாக்கி விடாமக் கேட்டுப் பார்த்

இவை ஒலிம்பிக் விளையாட்டுக்களின்போது பலவித விளையாட்டுக்களைக் குறிக்கும் சின்னங்கள்.

'ஸ்காலா' — முத்து



ஐந்தே

காசு

போதும்

உங்கள்

குடும்பம்

பெருகாமல்

தடுக்க!







உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை

**வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...**

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

**தாய் சேய் இருவரின் தேகநலம்...**

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச்

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp 70/67

தேன். எல்லாருமே அகலமாக் கையை விரிச்சுட்டா. கஷ்டம் எனக்குப் புதிசில்லே. பல்லைக் கடிச்சிண்டு சகலத்தையும் பொறுத்திருக்கேன். பட்டினி கிடந்திருக்கேன். ஆனா ஒரு வேளைச் சோத்துக்கு யாராத்து வாசலேயும் நான் மிதிச்சதில்லே. பிறத்தியார் சொத்துக்கு நான் ஆசைப்பட்டதில்லே. அடுத்தவா பொருள்னு விஷமா நெனச்சிருக்கேன். ஆனா அம்மா படுக்கையிலே விழுந்து, மருந்து வாங்கிக் கொடுக்க வேண்டிய நிலவரம் ஏற்பட்டதும், என்னைக் கட்டிப் போட்டிருந்த அத்தனை தர்மங்களும் சருகு போல உதிர்ந்தன. எந்தத் தர்மம் என்னை உதாசினப்படுத்தியதோ அந்தத் தர்மத்தை உதாசீனப்படுத்தி, அம்மாவைக் காப்பாற்ற நெனச்சேன். கை நீட்டினேன். அது ஒரு குழந்தையோட கழுத்தாப் போயிடுத்து. அங்கே தொங்கிண்டிருந்த சங்கிலியைக் கழட்டிண்டு போய்ப் புதுக்கோட்டையிலே வித்தேன். பணம் கிடைச்சது. அதனாலே அம்மாவுக்கும் மருந்து கிடைச்சுது. அது பாவத்தைப் பணமாக்கி வாங்கின மருந்தோல்லியோ? அம்மாவுக்கும் அதுவே எமலோகத்திலே இருந்து வந்த லெட்டர் ஆயிடுத்து. இனிமேல் ரொம்ப நாள் தள்ள மாட்டா.

''நான் செய்த திருட்டு ஒரு ரம்பம் மாதிரி என் நெஞ்சைச் சதா அறுத்திண்டிருக்கு. என் நெஞ்சில் இன்னொரு பக்கம் ஒரு பெரிய நெருப்புச் சூளை எரிஞ்சிண்டிருக்கு. அது அணையணும்னு நான் போலீஸிலே போய் உடனே ஆஜராயிடணும். ஆனா அப்படிச் செய்ய முடியலே. அம்மாவை இப்படி மரணப் படுக்கையிலே போட்டுட்டு நான் போயிட்டா அவ அனாதைப் பிணமா செத்துக் கிடப்பாளே! இதை நெனச்சுத்தான் வெளியே நடமாட்டம் இல்லாமே ஆத்திலேயே ஒளிஞ்சிண்டிருக்கேன். என்னிக்காவது ஒரு நாள் போலீஸ் இங்கே வரும் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனா அது இன்னிக்கு வரும்னு நான் எதிர்பார்க்கலே. விபத்து எதிர்பார்க்காத நேரத்திலேதானே வரும்? அப்படி வருகிறதனாலேதானே அதுக்கு விபத்துன்னு பேர். இனிமே நான் அம்மாவுக்காக ஒளிஞ்சிண்டிருக்க முடியாது. தர்மம்; அம்மாவைப் போல என்னை மன்னிக்காது விட்டுட்டும் விலகிப் போகாது. என் தோளை விடு. வாசல்லே நின்னுண்டிருக்கிற போலீஸாரிடத்திலேபோய்நான் ஆஜராயிடறேன்.''

அந்தப் பாவி சொல்லிட்டு என்ன செய்தான் தெரியுமோ? விடுவிடுன்னு வாசலை நோக்கிப் போறான். கையிலே விலங்கை மாட்டிக்கப் போறான்!

'' நில்லுடா, பாவி !''ன்னு கூச்சல் போட்டேன்.

அவன் நிக்கறான்.

''இங்கே வாடா, சண்டாளா!''

வருகிறான்.

''உங்க அம்மா எங்கேடா படுத்திண்டிருக்கா?''

கதவோரமா ஒரு ஜன்னல். அதோட கதவைத் திறந்துண்டு, ''இங்கே பாருங்கோ'' என்றான்.

பார்த்தேன்.

அதுவும் ஓர் அறைதான். அங்கே தொள தொளான்னு தொஞ்சுபோன ஒரு நார்க் கட்டில், கட்டில் நிறையக் கிழிசல் துணி. அந்தக் கிழிசல் துணிகளுக்கு நடுவே இன்னிக்கோ நாளைக்கோ கிழியப் போற இன்னொரு துணி. அதுதான் அவன் அம்மா. வதங்கின வெத்திலையைப் போல அவள் உடம்பே கருண்டு போயிருக்கு. அவள் முகம் தெரியலே. ஆனா கண்ணுக்குப் புலனாகாத மரணம் அங்கே கண் எதிரே நின்னுண்டிருக்கறது நன்னாத் தெரிஞ்சது.

அதுவரை நான் உணர்ச்சிகளாலே பாதிக்கப்பட்டவன் இல்லே. அப்போ அத்தனையும் சேர்த்துப் பழி வாங்கற மாதிரி என் நெஞ்சைப் பிளந்துண்டு, என் கண்ணைக் கலக்கிண்டு....

நான் அழறேனா?

முகத்தைத் திருப்பி, ரகுராமனைப் பார்த்தேன்.

''நான் வர்றேன். எனக்காக நீங்க ஒண்ணு செய்வேளோ? நீங்க யாரோ? நான் யாரோ? இந்த க்ஷணம் முதல் நீங்க நான் ஆயிடணும். நீங்க என்னை மாதிரியே இருக்கேள். எங்கம்மாவுக்கு நீங்க பிள்ளையாயிடணும். இன்னும் அவ பிரக்ஞையோட இருக்கா. அவ கூப்பிட்ட குரலுக்கு ஏன்னு கேளுங்கோ. கண்ணை மூடிட்டான்னா ஒரு கைக் கொள்ளியை அள்ளிப் போட்டுடுங்கோ. எனக்காக இதைச் செய்வேளா?'' அப்படீன்னு கண்ணீரும் கம்பலையுமாகப் பரிதாபமாக வேண்டினான் ரகுராமன்.

''உனக்காக நான் இப்போதே ஒண்ணைச் செஞ்சிண்டிருக்கேன். அதுதான் திருட்டு, ரகுராமன். அந்த வேஷத்தை எனக்குக் கட்டி வச்சு, எல்லோருமே அதை நம்பறா. ஆனா உன் அம்மாவண்டை நான் ரகுராமன் வேஷம் போட முடியாது. ஏன்னா தன்னுடைய ரகுராமனை அவளுக்குத் தெரியும். அவளோட கடைசி நேரத்திலே நான் ஒரு பொய் ரகுராமனாகி அவளுக்கு ஏன் புத்திர சோகத்தை ஏற்படுத்தணும்? நீ அவளோட பிள்ளை ரகுராமனாகவே இருந்துடு. நான் திருட்டு ரகுராமனாகவே இருந்துட்டுப் போறேன்''னு சொல்லிட்டு, அவன் பதிலுக்குக் காத்திருக்காமல் வாசலை நோக்கி நடந்தேன்.

வாசலில் எனக்காகக் காத்திண்டிருந்த சப் இன்ஸ்பெக்டர் என்னைப் பார்த்ததும், ''எங்கே சார், அந்த அம்மாளைக் கூட்டி வந்தீங்களா?''ன்னு கேட்டார்.

''நான் எதுக்காகக் கூட்டி வரணும்? அதுக்கெல்லாம் அவசியம் இல்லே. நான் சீதாராமன் இல்லே. நான்தான் ரகுராமன். நான்தான் குழந்தையோட சங்கிலியைத் திருடினவன்'' அப்படீன்னேன் நான்.

அவர் அதிர்ந்து போனார். ''என்ன சார் இது நீங்க சீதாராமன்தான் என்கிற அடையாளத்தைக் காட்டுவதற்காக எம்மை அழைத்துக்கொண்டு வந்தீர்கள். இதுதான் உங்க அடையாளமா?''

நான் சிரிச்சேன். ''அடையாளம்கறது சலவைக் குறி மாதிரி. அதைத் துணிக்குப் போடலாம். மனசுக்குப் போட முடியுமா?'' என்று கேட்டேன்.

★ இக் குறி விட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது




**ச**க்தி பிறக்குது மூச்சினிலே என்ற புகைப் படப் பகுதி (ஆகஸ்ட் 16, இதழ்) சிறப்பாக இருந்தது. ஆனால் காமன்வெல்த் விளையாட்டுப் போட்டியில் மல்யுத்தத்தில் தங்கப் பதக்கம் பெற்ற இளைஞன் வேத் பிரகாஷின் படத்தை அத் தொகுப்பில் காணோமே? உலகத்தையே அதிசயத்தில் ஆழ்த்திய அந்த வாலிபரை விட்டுவிடலாமா?

சென்னை—31
13—8—70 ராஜு



(இதோ உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்து விட்டோம். படத்தில் வெற்றி வீரர் வேத் பிரகாஷ் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்து மலர் மாலை அளித்து மகிழ்கிறார். - ஆசிரியர்)

★ **இ**ன்றைய இந்திய அரசாங்கம் பெரு வாரியான இந்திய மக்களது எண்ணங்களைப் பிரதிபலிப்பதாக இல்லை.

நாட்டில் உடனடியாகச் சமாளிக்கப்பட வேண்டியபிரச்னைகள் பலவிருக்க, ரஷ்யாவைக் குளிர்விக்கவென, அனாவசியமாக பாங்குகளைத் தேசியமயமாக்கல், பஞ்சு வியாபாரத்தை அரசாங்கம் மேற்கொள்ளல், மேடம் பின்னை வரவேற்றல் போன்ற காரியங்களைச் செய்வது உள்நாட்டு மக்களை மட்டுமின்றிப் பல வெளி நாட்டோரையும் சினமடையச் செய்துள்ளது. பின்னை வரவேற்றதால் இந்தியா தென்கிழக்காசிய நாடுகளிடையே தன் மதிப்பை இழந்துவிட்டதோடன்றி உறவையும் இழக்கும் நிலையில் உள்ளது.

சுயநலத்துக்காக, கம்யூனிஸ்டுகளை ஆதரித்து, கைகுண்டு செய்யும் தொழிலை நக்ஸலைட்டுகளின் ஏகபோக குடிசைத் தொழிலாக வளர்த்துள்ள அரசாங்கம், கூடிய சீக்கிரம் இந்தியாவையும், மக்களையும் கம்யூனிஸ்டுகளிடமும் ரஷ்யர்களிடமும் அடகு வைத்துவிடும் என்பதில் துளியும் ஐயமில்லை. ரஷ்யாவிடம் அதன் சகோதர நாடான செக்கோஸ்லோவேகியா பட்ட பாட்டில் நம் நிலை என்னாகும்?

நாட்டின் இன்றைய நிலையில் மாஜி ராணுவ அதிகாரி திரு கரியப்பா சொற்படி ஜனாதிபதியின் ஆணைக்கு உட்பட்ட ராணுவ ஆட்சிதான் இந்தியாவை அழிவுப் பாதையினின்று மீட்டு ஜனநாயகத்தையும், சுதந்திரத்தையும் தழைக்கச் செய்ய முடியும். அல்லது மூதறிஞர் ராஜாஜி கூறுவது போல் ஜனநாயக சக்திகள் சில்லறை வித்தியாசங்களை மறந்து நாட்டைக் காக்க ஒன்றுபட வேண்டும்.

பம்பாய்—71
27—7—70 ஏ. சுந்தரராஜன்

**ச**மீபத்தில் கேரளாவில் கோங்காட்டில் ஒருவரைக் கொலை செய்து அவரது வீட்டைக் கொள்ளையடித்து அவரது தலையை வெட்டி வீட்டின் முன் மாட்டிவைத்துவிட்டுச் சென்ற நக்ஸல்பாரிகளைக் குறித்து நாடே இன்று அருவருப்படைகிறது. ஆனால் நாடாளும் மந்திரிகள் இந்த நக்ஸல்பாரிகளைக் குறித்து ஏதும் நடவடிக்கை எடுக்காதது அதைவிட அருவருக்கத் தக்கது. ஒருவனது ரத்தம் ஒரு நாட்டையே மாற்றும் என்பார்கள். இந்த நிகழ்ச்சியில் சிந்திய ரத்தம் வரலாற்றையே '72ல் மாற்றப் போகிறது. காந்தியார் வாழ்ந்த நாட்டில் இப்படி நடக்குமா என்ற ஐயம் எழும் நேரத்தில், இந்திரா ஆளும் நாட்டில் இதுவும் நடக்கும் இன்னமும் நடக்கும் என்று உணர்வு கூறுகிறது.

கோவை,
4—8—70 என். சம்பூர்ணம்

**இ**ன்று பல பேச்சாளர்களும் 'கர, கர' வென்று தொண்டையை வைத்துக் கொண்டு அறிஞர் அண்ணா போல் பேசி வருகிறார்கள். இது வருந்தத்தக்கது. அறிஞரும், நாவலரும் யாரையாவது பார்த்துக் 'காப்பி'யடித்துப் பேசினார்களா? இல்லை, தமக்கென்று ஒரு புதிய பாணியை வகுத்துக் கொண்டு தரணியில் தலைசிறந்த பேச்சாளர்களாக விளங்குகின்றனர். அது போன்று இன்றைய பேச்சாளர்கள் புதிய பாணியை வகுத்துக்கொண்டு பேச வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

செம்பனார் கோயில்
12—5—70 ஜி. அழகிரிசாமி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon